# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

**வேண்டுகோள்**

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங் களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்ய லாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தா தாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி :
71231



விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# சுவாமி விவேகானந்தர்

## வாழ்க்கை வரலாறு

### ரா. கணபதி

672 பக்கங்கள்! டெம்மி சைஸ்!

பாரதத்தின் தவப்புதல்வராகிய சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கை வரலாற்றைச் சித்தரிக்கும் நூல். கண்ணைக் கவரும் வண்ண ஓவியங்கள்.

ஆகஸ்டு மாத இறுதியில் வெளிவருகிறது!

விலை ... ... ... ... ... ரூ. 30/-

**சலுகை விலை ... ... ... ... ரூ. 15/- மட்டும்.**

**இச்சலுகை 31-8-1983 வரை.**

விவேகானந்தரது வாழ்வு ஒரு தனி மனிதனின் வாழ்வு அல்ல. அது-பழைய பாரதமும் புதிய பாரதமும் ஒன்று சேர்ந்த வாழ்வு! பழைய வேதாந்தத்திற்குப் புது மெருகு கொடுத்து அதைத் தினசரி வாழ்வோடு இணைத்து, ஏற்றம் கண்ட வாழ்வு! ஞானியின் உறுதி, பக்தனின் குழைவு, யோகியின் தீரம், கர்மவீரனின் செயல்திறம், தேசபக்தனின் வீரம்—இவையனைத்தும் ஒருங்கிணைந்ததோர் வாழ்வு! ஆத்ம ஞானம் எனும் ஆழ்கடலில் மூழ்கி அடிவரை சென்று, அங்குக் கிடக்கும் நல்முத்துக்களைத் திரட்டி எல்லோருக்கும் பகிர்ந்தளித்த வாழ்வு! நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த உழைத்து, உண்ண உணவும் உடுக்க உடையுமின்றித் தவிக்கும் பாரதத்தின் ஏழை மக்களை எண்ணி எண்ணி விழிநீர் ஆறுய்ப் பெருக்கிய வாழ்வு! அவர்கள் முன்னேற்றமே தமது இலட்சியம் என்று, அதற்காகவே உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஈந்த ஒப்பற்ற பெருமகனின் வாழ்வு! இப்பெருவாழ்வை இனிய, எளிய நடையில் தந்துள்ளார் திரு. ரா. கணபதி.

ரூ. 30/- விலை கொண்ட இப்புத்தகத்தை எல்லா அன்பர்களும் படித்துணரும் பொருட்டு ரூ. 15/-க்குத் தருகிறோம். இச்சலுகை ஆகஸ்டு 31 வரை மட்டுமே. ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் நேரில் பெற்றுக் கொள்ளலாம். தபாலில் வேண்டுவோருக்கு தபால் செலவு ரூ, 6/-.

காசோலை, M.O., டிராப்ட், அனுப்ப வேண்டிய முகவரி:—



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
16, ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-600 004.

# AN APPEAL



RAMAKRISHNA MISSION STUDENTS' HOME
MYLAPORE, MADRAS-600 004
PHONE: 73064

Dated: 15th May 1983

Ramakrishna Mission Students' Home which is an ORPHANAGE is a Unit of the Ramakrishna Mission, Belur Math, Howrah (W.B.). The Home was inaugurated in 1905 by Srimat Swami Ramakrishnananda, a direct disciple of Bhagavan Sri Ramakrishna. The Home provides free boarding and lodging facilities for 191 High School boys and 119 Technical Institute students. Besides six college students are provided free accommodation in the Home. In addition there is a Primary School where 222 boys and 168 girls are studying as day scholars.

During the year 1942-46 when the Residential High School was located temporarily in Uttiramerur, the staff and pupils engaged themselves in rural services. As a result of these, an elementary school was started in 1945 in the village of Malliankarnai 82 K.M. from Madras in Uttiramerur Taluk of Chingleput District. There are 242 students in the school in standards I to VIII. A Hostel for Backward Classes and Harijan Students was started in 1947. Now there are 32 students in the Hostel.

One temporary shed measuring 40′ × 16′ was constructed in 1947 to house the standards VII and VIII. The other classes are conducted in the additional sheds with mud walls and palmairah leaves roofing. As the buildings are old and are in a dilapidated condition it has been decided to construct a pucca building at a cost of about Rs. 12/- lakhs. The philanthrophic public are requested to donate liberally for this programme to serve the backward classes in a remote rural area. Donations to the Ramakrishna Mission are exempted from Income-Tax under section 80-G.

Cheques and Drafts may please be crossed and drawn in favour of "Ramakrishna Mission Students' Home, Madras-4" and sent by Registered Post.

Thanking you,

Yours in the Lord,
**Swami Veetabhayananda**
*Secretary*

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | ஆகஸ்ட்—1983 ருதிரோத்காரி ஸூ ஆவணி மீ | இதழ் 8

பொருளடக்கம்



எழுத்தாளர்களிடமிருந்து நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள் முதலியன வரவேற்கப்படுகின்றன.—**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை. —திருமூலர்

वृन्दावनद्रुमतलेषु गवां गणेषु वेदावसानसमयेषु च दृश्यते यत् ।
तद् वेणुवादनपरं शिखिपिञ्छचूडं ब्रह्म स्मरामि कमलेक्षणमभ्रनीलम् ॥

வ்ருந்தாவநத்ருமதலேஷு கவாம் கணேஷு
வேதாவஸாநஸமயேஷு ச த்ருச்யதே யத் ।
தத் வேணுவாதநபரம் சிகிபிஞ்சசூடம்
ப்ரஹ்ம ஸ்மராமி கமலேக்ஷணமப்ரநீலம் ॥

—ஸ்ரீகிருஷ்ணகர்ணாம்ருதம்

விருந்தாவனத்து மரங்களின் நிழலிலும், பசுக் கூட்டத்தின் நடுவிலும், வேதாந்தத்தின் சித்தாந்தங்களிலும் காண்கிற பரம்பொருள் ஸ்ரீகிருஷ்ணனே. அவன் குழலூதுவதில் ஆசை கொண்டவன்; மயில் தோகையைத் தலையில் அணிந்தவன்; தாமரைக் கண்ணன்; வானம் போல் நீலவண்ணன். அவனை எப்போதும் நினைவில் கொள்கிறேன்.

முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! என் பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே! என் கள்வா!
தனியே னாருயிரே! என் தலைமிசையாய் வந்திட்டு
இனி நான் போகலொட்டேன் ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே.

—நம்மாழ்வார்

# பிரார்த்தனை



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

விரைவில் வெளிவர இருக்கும் 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்' என்ற நூலிலிருந்து ஒரு பகுதி இங்கே இடம் பெறுகிறது.

ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்கப் பல பக்தர்கள் வந்திருந்தனர். அவர்களிடம் பரமஹம்சர் பின்வருமாறு கூறினார்:—

நரலீலையில் அவதார புருஷர் மனிதனைப் போலவே நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அதனால்தான் அவரை அறிந்துகொள்வது மிகவும் கடினமாக இருக்கிறது. பசி, தாகம், வியாதி, தூக்கம், சில சமயம் பயம் ஆகிய எல்லாவற்றிலும் மனிதனைப் போலவே அவர் நடந்துகொள்கிறார். இராமர், சீதையின் பிரிவால் பெரும் துன்பத்தில் ஆழ்ந்தார். கிருஷ்ணர் தமது தந்தை நந்தரின் செருப்பைத் தலையில் தாங்கிக்கொண்டு சென்றார். உட்கார மணைக்கட்டையைத் தூக்கிச் சென்றார். இறைவன் மனிதனாக அவதரிக்கும்போது, மனிதனைப்போலவே வாழ்கிறார். பிருந்தாவனத்திற்குப் போனால் கிருஷ்ணர் லீலைபுரிந்த பல இடங்களைப் பார்க்கலாம்.

**சுரேந்திரர்:** நாங்கள் விடுமுறையில் பிருந்தாவனம் சென்றிருந்தோம். அங்கே 'பணம் கொடுங்கள், பணம் கொடுங்கள்' என்ற ஏழைகளின் நச்சரிப்புத் தாள முடியவில்லை. எப்பொழுதும் 'கொடு, கொடு' என்ற வார்த்தைதான். கோயில் பண்டாக்களும் இதே மாதிரிதான். எல்லோரும் 'கொடு, கொடு' என்றே கேட்கின்றனர். நாங்கள் நாளை கல்கத்தாவிற்குப் போகிறோம் என்று அங்கிருந்த பண்டாக்களுக்குக் கூறியிருந்தோம். ஆனால், அதற்கு முந்தின தினமே அங்கிருந்து ஓடி வந்துவிட்டோம்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** சே! சே! உங்களுக்கு வெட்கமாக இல்லை? நாளை புறப்படுகிறேன் என்று கூறிவிட்டு முதல் நாளே ஓடி வந்துவிடுவதா?

**சுரேந்திரர்:** (சங்கடத்துடன்): அங்குள்ள காடுகளில் வைணவ சாதுக்களான பாபாஜிகள் தனிமையில் சென்று சாதனம் பழகுவதைக் கண்டேன்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** பாபாஜிகளுக்கு ஏதாவது கொடுத்தாயா?

**சுரேந்திரர்:** இல்லை, ஐயா.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** இது சரியல்ல. சாதுக்களுக்கும் பக்தர்களுக்கும் ஏதாவது கொடுக்க வேண்டும். பணம் படைத்தவர்கள் இப்படிப்பட்டவர்களைக் காணும்போது அவர்களுக்கு ஏதாவது தர வேண்டும்.

மதுரநாதருடன் நான் பிருந்தாவனம் சென்றிருந்தேன். அருகிலுள்ள மதுராவில் யமுனைப் படித்துறையைப் பார்த்த மாத்திரத்திலேயே வசுதேவர் கிருஷ்ணரைக் கையில் தூக்கிக்கொண்டு



யமுனையைக் கடக்கும் காட்சி என் கண்முன் திடீரென்று விரிந்தது.

மாலைவேளைகளில் யமுனைக்கரையில் நடந்து கொண்டிருப்பேன். அங்கே சிறு சிறு குடிசைகளைக் கண்டேன். பல பெரிய இலந்தை மரங்களும் இருந்தன. புல் வெளிகளில் மேய்ந்துவிட்டுப் பசுக்கள் மாலைநேரத்தில் வீடு திரும்பும். அவை யமுனையைக் கடந்து செல்லும். இடைச் சிறுவர்கள் பலர் மாடுகளை ஓட்டிக் கொண்டு வருவார்கள். இந்தக் காட்சி களைக் கண்ட மாத்திரத்தில், 'கிருஷ்ணன் எங்கே? என் பிருந்தாவனக் கிருஷ்ணன் எங்கே?' என்று உரக்கக் கத்திக் கொண்டே வெளியுணர்வை இழந்து விடுவேன்.

அங்கே சியாமா குண்டம், ராதா குண்டம் என்ற இரண்டு இடங்களையும் பார்க்க ஆசைப்பட்டேன். மதுர் என்னைப் பல்லக்கில் ஏற்றி அனுப்பினார். அதிக தூரம் செல்ல வேண்டும். ஆகவே ஜிலேபி முதலான பண்டங்களை வாங்கிப் பல்லக்கில் வைத்தார். பல்லக்கில் புல் வெளியைக் கடந்து சென்றபோது, ஏ கிருஷ்ணா! நீ இன்று இல்லை; ஆனால் நீ விளையாடிய இடம் மட்டும் அப்படியே இருக்கிறது. நீ மாடு மேய்த்த அதே புல்வெளி. நீ மட்டும் இல்லையே?' இவ்வாறு நினைத்ததும் பெரிதாக அழத் தொடங்கிவிட்டேன்.

இருதயன் பல்லக்கோடு நடந்து வந்துகொண்டிருந்தான். நான் கண் ணீரில் மூழ்கிப் போனேன். பல்லக்கைச் சுமப்பவர்களை நிற்கச் சொல்லவும் என்னால் முடியவில்லை.

சியாமா குண்டம், ராதா குண்டம் ஆகிய இடங்களில் சாதுக்கள் சிறு சிறு மண் குடிசைகள் அமைத்துக்கொண்டு தங்கியிருந்ததைக் கண்டேன். அந்தக் குடிசையில் சாதுக்கள் சுவரைப் பார்த்த படி உட்கார்ந்து சாதனை புரிந்தனர். முன்புறம் பார்த்துக்கொண்டு உட்கார்ந் தால் அங்கு வரும் மக்கள் மீது தங்கள் பார்வை விழும், தியானம் கலையும் என்பதனால் அப்படி உட்கார்ந்திருந் தார்கள். அங்குள்ள 'பன்னிரண்டு




சோலைகள்' என்ற இடம் பார்க்க வேண்டிய முக்கியமான இடமாகும்.

அங்கே 'பாங்கேவிஹாரி'யின் விக்கிர கத்தைக் கண்டதும் எனக்குப் பரவச நிலை ஏற்பட்டது. அந்த நிலையில் அதைக் கட்டித் தழுவிக்கொள்ள ஓடினேன். ஆனால் அங்குள்ள கோவிந்தஜியை ஒரு முறைக்கு மேல் என்னால் தரிசிக்க முடிய வில்லை. மதுராவில் தங்கியபொழுது கிருஷ்ணனை இடைப்பையனாகக் கனவில் கண்டேன். இருதயனும் மதுரபாபுவும் இதே போன்று கனவு கண்டனர். (சுரேந்திரரிடம்): யோகம், போகம் இரண்டையும் நீ அனுபவிக்கிறாய்.

பிரம்மரிஷி, தேவரிஷி, ராஜரிஷி என்று ரிஷிகள் மூன்று வகையினர். சுக தேவர் பிரம்மரிஷிக்கு உதாரணம். சாஸ் திர சம்பந்தப்பட்ட நூல் ஒன்றைக்கூட அவர் தம்மிடம் வைத்துக்கொள்வ தில்லை. நாரதர் தேவரிஷி; ஜனகர் ராஜ ரிஷி. இவர்கள் பயன் கருதாமல் காரியங் களைச் செய்தவர்கள். ♣

சிறப்புக் கட்டுரை

# நமக்குச் சொந்தம்

நமக்குச் சொந்தமல்லாத பொருள்களை நாம் நமக்குச் சொந்தம் என்று எண்ணியும், இவை நமக்குச் சொந்தம் என்று கூறியும் மதி மயங்கி நிற்கிறோம்.

இந்த வீடு நம்முடையது என்கிறோம். இதற்கு முன் எத்தனையோ பேர் அதனை என்னுடையது என்னுடையது என்று கூறினார்கள். நமக்குப் பின்னர் பலர் அவ்வாறு கூற இருக்கிறார்கள். இந்த உலகங்கள் யாவும் இறைவனுடையவை. எல்லாவற்றையும் உடையவராதலின் இறைவனுக்கு உடையவர் என்ற பேருண்டு. எல்லாம் அவனுடைய உடைமை! ''உடையானே'' என்கிறார் மணிவாசகர்.

நாம் விலை கொடுத்து நம் பேருக்குப் பதிவு செய்துள்ள நம் வீட்டில் வாழும் பல்லி, எலி, பூனை, எட்டுக்கால் பூச்சி முதலியவை வீட்டைத் தமக்குச் சொந்தமாகவே எண்ணுகின்றன. அது போல் எல்லாம் இறைவனுடைமையாக இருக்கவும் அவற்றை நம்முடையவை என்று எண்ணி மயங்குகிறோம். என்னே நமது அறியாமை!

இனி இந்த உடம்பும் நமக்குச் சொந்தமன்று. இந்த உடம்பு நமக்கு இறைவன் கொடுத்த ஒரு வாடகை வண்டி. இதில் ஏறி நாம் பிரயாணம் பண்ணுகிறோம். ஒரு குறிப்பிட்ட காலத்தை இறைவன் நமக்கு அளவிட்டுக் கொடுத்துள்ளார். அந்தக் கால எல்லைக்குள் நாம் முத்தியுலகை நாடிப் பிரயாணம் செய்ய வேண்டும். பெரும்பாலோர் நமன் உலகை நாடியே போய்க்கொண்டிருக்கிறார்கள். சாவதற்கே விரைகின்றனர்.

இந்த உடம்பை நெருப்பு எனக்கென்றும், புழு எனக்கென்றும், மண் எனக்கென்றும், நாய் எனக்கென்றும் கூறுகின்றன. நாம் நம்முடையது என்று கருதி ஜபம், தவம், தியானம், ஆலய வழிபாடு முதலியன ஒன்றும் புரியாமல், வேளை தவறாமல் விலாப் புடைக்க உண்டு இந்த உடம்பை வளர்க்கிறோம்.

ஆகவே இந்த உடம்பு, செல்வம், வான், காற்று, கனல், புனல், மண், கதிர், மதி முதலியன எல்லாம் இறைவனுடைய உடைமைகள்.

கிருபானந்த வாரியார்



ஸ்வம்—சொத்து. எல்லாவற்றையும் சொந்தமாக உடையவராதலின் ஸ்வாமி என்ற பெயரால் ஆண்டவனை அழைக்கிறோம்.

முற்றத் துறந்த முனிவர் ஒருவர் திருத்தல யாத்திரை புரிந்து வந்தார். பற்றற்ற பரமஞானியாகிய அவர் இன்றிருந்த ஊர் நாளை இரார். ஒரு வேளையே உப்பில்லாத உணவை உண்பார். அவர் பொய்யை அதிகமாக வெறுப்பவர்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரில் தலை

என்ற திருக்குறளை இடையறாது கூறுவார். அவருடைய வாய் மறந்தும் பொய் புகலாது. அன்றியும் பொய்புகல்வார் மனையில் புசியார். இதனை மிகவும் சிறந்த குறிக்கோளாகக் கொண்டு ஒழுகினார்.

ஓர் ஊருக்குப் போனால் அங்கே உண்மை பேசுவோர் யார் எனக் கேட்டறிந்த பின்னர் அவர் வீட்டில் உச்சிப்பொழுதில் ஒரு சிறிது அன்னம் உண்பார்.

ஒரு நாள் ஓர் ஊருக்குச் சென்றார். ''இந்த ஊரில் உண்மையாளர் யாவர்?'' என வினவினார். ''அதோ தெரிகிற மாடிவீட்டில் வாழ்கிற முதலியார் உண்மையாளர். அடியார் பக்தியுடையவர். ஒரு லட்சம் செல்வமும், நான்கு புதல்வரும் உடையவர்'' என்று பலரும் கூறினார்கள். பின்னர் முதலியாருடைய வீட்டை முனிவர் அணுகினார்.

ஆசனத்தில் அமர்ந்திருந்த முதலியார் உடனே எழுந்தார். ஓடி வந்து ஞானியார் அடிமலர் மீது விழுந்தார். அவரை ஆசனத்தில்

எழுந்தருளப் புரிந்து, ''பெருமானே! உணவுசெய்ய எழுந்தருள வேண்டும்'' என்று வேண்டினர். அவருடைய அன்பு அடக்கம் பணிவு முதலிய நற்குணங்களைக் கண்டு முனிவர் முகமலர்ந்து உண்மையாளர் தாமா என்று சோதித்தறிந்த பின்னரே உணவு செய்ய வேண்டும் என்று எண்ணினர்.

''ஐயா! உமக்குச் செல்வம் எவ்வளவு உண்டு?''

''சுவாமி! இருபத்திரண்டாயிரம் ரூபாய் உண்டு.''

''குழந்தைகள் எத்தனை பேர்?''

''சுவாமி! ஒரே புதல்வன்தான்.''

''உமக்கு என்ன வயது?''

''சுவாமி! எனக்கு வயது மூன்று வருஷம் ஐந்து மாதம் ஏழு நாள் பதினாறரை மணி.''

முனிவருக்குப் பெருஞ் சினம் மூண்டது.

''ஐயா! சுத்தப் புளுகராக இருக்கிறீர். நீர் பேசுவதெல்லாம் பெரும் புரட்டு. உம் வீட்டு அன்னம் என் தவத்தை அழிக்கும். நான் பொய்யர் வீட்டில் புசியேன்'' என்று கூறிச் சீறி விழுந்தார்.

முதலியார் அவர் காலில் விழுந்து, ''அருள் நிறைந்த அண்ணலே! அடியேன் ஒருபோதும் பொய் புகலேன். சத்தியம் சொல்கிறேன்; சற்று நிதானமாக ஆராய்ந்து பார்த்து உண்மையுணர்வீராக'' என்று கூறி, தமது வரவு செலவுப் புத்தகத்தைக் காட்டினர். அதில் இருப்புத் தொகை ஒரு லட்ச ரூபாய் என்று இருந்தது.

''அடேய்! இதோ உனக்குச் சொத்து ஒரு லட்சம் என்று இருக்கிறதே. நீ இருபத்திரண்டாயிரந்தான் என்று பொய் சொன்னாயே!' என்று கடிந்தார் முனிவர்.

''சுவாமி! ஒரு லட்ச ரூபாய் பெட்டியில் உள்ளது. ஆனால் பெட்டியில் உள்ள பணம் எனக்குச் சொந்தமாகுமா? இதோ பாருங்கள், தருமக் கணக்கில் இதுகாறும் இருபத்திரண்டாயிரமே செலவழிந்துள்ளது. தருமம் புரிந்த பணந்தானே என்னுடையது? இப்போது நான் மாண்டால் இந்தப் பெட்டியில் உள்ள பணம் என்னுடன் வராதே; உடன் வருவது தருமம் ஒன்றுதானே? ஆகவே எனக்குச் சொந்தம், தருமம் புரிந்த இருபத்திரண்டாயிரம்தான்'' என்று கூறினர் முதலியார்.

முனிவர் இதைக் கேட்டு வியப்புற்றார். ''ஆமாம், உனக்கு நான்கு புதல்வர்கள் உண்டு என்று கேள்விப்பட்டேனே?''

---

நிர்வாணமாகத் திரிவதனால் மோட்சம் கிடைக்குமென்றால் காட்டிலுள்ள மிருகங்கள்தாம் முதலில் மோட்சமடையும். —கபீர்தாசர்

நீ உன்னைப் பைத்தியம் என்று நினைத்துக்கொண்டால் நீ பைத்தியம் அல்ல ஆனால் நீ மற்றவர்களைப் பைத்தியம் என்று நினைத்துக்கொண்டால் நீ பைத்தியம்தான்.

—ஓர் அறிஞர்

பிறருக்கு உபதேசம் பண்ணிவிட்டு, தாங்கள் அவற்றைப் பின்பற்றாமல் இருப்பவர்கள் சாணை தீட்டும் கல் மாதிரி. சாணை தீட்டும் கல் மற்றப் பொருள்களைக் கூர்மையாக்கும். ஆனால் தான் மட்டும் மழுங்கலாகத்தான் இருக்கும்.

—பெஞ்சமின் பிராங்கிளின்

''சுவாமி! எனக்குப் பிறந்த பிள்ளைகள் நால்வர்; ஆனால் என் பிள்ளை ஒருவன்தான்.''

''அப்பா! நீ சொல்வதன் கருத்து எனக்கு விளங்கவில்லையே!''

''சுவாமி! விளங்க வைக்கிறேன்.''

''மகனே! நடராஜா'' என்று அழைத்தார் முதலியார்.

''சீட்டு விளையாடுகிறேன். வர முடியாது'' என்று பதில் வந்தது.

''மகனே! வேல்சாமி!''

''ஏன் இப்படிக் கதறுகிறாய்? வாயை மூடிக்கொண்டிரு.''

''மகனே! சிவசாமி!''

''உனக்குப் புத்தியிருக்கிறதா? உன்னோடு பேச என்னாலாகாது. பூமிக்குச் சுமையாக இன்னும் ஏன் இருக்கிறாய்?''

''மகனே! கந்தசாமி!''

கந்தசாமி ஓடி வந்து பிதாவையும் முனிவரையும் தொழுது, ''சுவாமி! பால் கொண்டு வரட்டுமா? பழம் கொண்டு வரட்டுமா?'' என்று கேட்டு உபசரித்து விசிறி எடுத்து வீசிக்கொண்டு பணிவுடன் நின்றான்.

முதலியார், ''சுவாமி! அந்த மூவர்களும் என் புதல்வர்களா? என் கருத்துக்கு முரணானவர்கள் பிள்ளைகளா? போன பிறப்பிற் பட்ட கடன்காரர்கள். இவன் ஒருவன்தான் என் பிள்ளை'' என்றார்.

''அப்பா! உன் கருத்து உவகையைத் தருகிறது. வயது விஷயத்தில் நீ கூறியதன் உட்பொருள் யாது?''

''சுவாமி! அடியேன் நாள் 1-க்கு $1\frac{1}{2}$ மணி நேரம்தான் வழிபாடு செய்கிறேன். மிகுதி நேரமெல்லாம் வயிற்றுக்காகவும் குடும்பத்துக்காகவும் உழைக்கிறேன். பேசாத நாள் எல்லாம் பிறவா நாள்தானே? இறைவனைப் பூசிக்கும் நேரம்தான் எனக்குச் சொந்தம். அடியேனுக்கு இந்த உடம்பு பிறந்து அறுபது ஆண்டுகள் ஆயின. ஐந்து வயதிலிருந்து பூசிக்கிறேன். நாள் ஒன்றுக்கு $1\frac{1}{2}$மணி நேரம் பூசை செய்கிறேன். அந்த வகையாகப் பார்த்தால், முப்பதினாயிரத்து நூற்றுப் பன்னிரண்டரை மணி நேரம் ஆகிறது. ஆகவே அடியேன் பிறந்து அறுபது ஆண்டுகளானாலும் எனக்குச் சொந்த வயது திட்டமாக மூன்று ஆண்டு ஐந்து மாதம் ஏழு நாள் பதினாறரை மணிதான்.

(1) தருமம் செய்த பணம் எனக்குச் சொந்தம்.

(2) என் கருத்தை அநுசரிக்கிறவனே எனக்குச் சொந்த மகன்.

(3) பூஜை செய்த நேரம் எனக்குச் சொந்தம்'' என்றார்.

இதனைக் கேட்ட முனிவர் பெரிதும் மகிழ்ந்தார். அவர் வீட்டில் உண்டு வாழ்த்திவிட்டுச் சென்றார்.



# வா மகளே, வா!

## ஏ. சுப்பிரமணியம்

அன்னை சாரதாதேவியார் அப்போது தாம் பிறந்த ஊராகிய ஜயராம்பாடியில் தங்கியிருந்தார்.

இன்றைக்குக் கல்கத்தாவிலிருந்து ஜயராம்பாடிக்குத் தார்பாய்ச்சிய சாலையில் தங்குதடையின்றி மிகுந்த வேகத்தில் இரண்டரை மணிநேரத்தில் சென்றுவிட முடியும். ஆனால் அன்னையார் வாழ்ந்த காலத்தில் அந்த ஊரை அடைவதில் இருந்த பெரும் துன்பத்தைப் பற்றி இப்போது நாம் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது.

எந்தத் திசையிலிருந்து வந்தாலும், மேடும் பள்ளமும் வாய்க்காலும் வரப்புகளும் வயலும் நீரும் நிறைந்த அந்தப் பகுதியைக் குறைந்தது இருபது மைல்களாவது நடந்தோ அல்லது உள்ளே உட்கார்ந்து வந்தால் எலும்பை உடைக்கும் அந்தக் காலக் கட்டைவண்டியில் பயணம் செய்தோதான் ஜயராம்பாடியை அடைய முடியும்.

ஒரு நாள் கர்பேடா என்ற கிராமத்திலிருந்து ஒரு பக்த தம்பதிகள் கட்டைவண்டியில் அன்னையைக் காணப் புறப்பட்டனர். இரவு முழுவதும் அவர்கள் அந்த வண்டியில் பயணம் செய்தார்கள். காலையில் ஜயராம்பாடிக்குத் தெற்கே ஒன்றரை மைல் தொலைவிலுள்ள கிஸ்தி என்ற ஊரை அடைந்தனர். அதற்கு மேல் வண்டியில் போக முடியவில்லை. எனவே, வண்டியை அங்கேயே விட்டுவிட்டு, வயல்நடுவே வரப்பு வாய்க்கால் வழியாக நடந்து காலை பத்து மணிக்கு ஜயராம்பாடியை அடைந்தனர்.

அவர்கள் தனியாக வரவில்லை. தங்கள் குழந்தைகள் நான்கு பேரையும் உடன் அழைத்து வந்திருந்தனர். அதில் கடைசிக் குழந்தை தாயிடம் பால் குடிக்கும் கைக் குழந்தை. அந்தக் குழந்தை அப்போது, அந்தப் பகுதிக்கே உரிய கடுமையான மலேரியாக் காய்ச்சலால் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தது.

இரவு முழுவதும் மேடு பள்ளங்கள் நிறைந்த பாதையில் கட்டைவண்டியில் அவர்கள் பயணம் செய்ததனாலும், நான்கு குழந்தைகளுடன் ஒன்றரை மைல் தொலைவு குறுகிய வரப்புகளின் வழியாக நடந்து வந்ததனாலும் அன்னையின் வீட்டை நெருங்குவதற்குள் அவர்கள் மிகவும் களைத்துப் போனார்கள்.

ஜயராம்பாடி அவர்களுக்கு முன்பின் தெரியாத ஊர். வழியில் பலரிடம் விசாரித்துக்கொண்டே அன்னையின் வீட்டை அடைந்தனர்.

இது வரையில் ஏதோ ஒரு வகையான உற்சாகத்தோடும் நம்பிக்கையோடும் வந்த அவர்களுக்கு அன்னையின் வீட்டை அடைந்ததும் தயக்கம் ஏற்பட்டது. அங்குள்ளவர்களில் ஒருவர்கூட அவர்களுக்குத் தெரியவில்லை. யாரைக் கேட்பது, மேற்கொண்டு என்ன செய்வது என்று தெரியாமல், வீட்டின் வெளியே சுற்றும் முற்றும் பார்த்தபடி ஒன்றும் புரியாமல் அவர்கள் குழந்தைகளோடு நின்றுகொண்டிருந்தார்கள்.

அவர்கள் அன்னையைப்பற்றி நிறையக் கேள்வியுற்றிருந்தார்கள். அவரைக் காண வேண்டும், அவரிடம் தீட்சை பெற

வேண்டும் என்ற ஆர்வத்துடன் வழியில் எவ்வளவோ துன்பங்களை ஏற்றுக்கொண்டு அவரது வீட்டின் அருகில் வந்துவிட்டார்கள்.

இப்போது என்ன செய்ய வேண்டும்? அன்னை எங்கே இருக்கிறார்? அவரை எப்படிப் பார்ப்பது? அவர் வீட்டிற்கு உள்ளேயும் வெளியேயும் வந்து போகும் மனிதர்களில் யாரைக் கேட்பது? என்னவென்று கேட்பது?

இதற்குள் குழந்தைகள் பசிபசி என்று அழ ஆரம்பித்துவிட்டன. சரியான தூக்கமில்லாமல் இவ்வளவு தொலைவு வெயிலில் வந்த குழந்தைகள் அங்கேயே தரையில் படுக்கவும் துவங்கிவிட்டன. அழும் குழந்தைகளின் இந்தப் பசியை யார் தீர்ப்பார்கள்? இவர்களை எங்கே படுக்க வைப்பது? தாங்கள் எங்கே தங்குவது? அருகில் ஒரு சிறிய குடிசை இருந்தது. அதற்குள் போகலாமா என்று பார்த்தார்கள். அதற்குள் நிறைய ஆண்கள் இருந்தார்கள்.

அப்படியே சோர்ந்துபோய்க் குழந்தைகளோடு வெயிலில் உட்கார்ந்துவிட்டார்கள். இதற்குள் அவர்களின் வருகை யார் மூலமோ அன்னைக்கு எட்டியது.

உடனே அன்னை ஒருவரை அனுப்பி அவர்களை உள்ளே அழைத்து வரச் சொன்னார். தயங்கித் தயங்கி வீட்டிற்குள் நுழைந்த அந்தப் பெண்ணை அன்னையே எதிரே வந்து அகமும் முகமும் மலர, அவள் இடுப்பில் இருந்த குழந்தையைக் கைநீட்டி வாங்கிக்கொண்டு, ''மகளே! வந்துவிட்டாயா? வா! வா!'' என்று பரிவும் பாசமும் ததும்ப வரவேற்றார். இந்த வார்த்தைகளைக் கேட்டதும் இவ்வளவு நேரம் சொல்ல முடியாத துயரத்திலும் குழப்பத்திலும் மூழ்கிக் கிடந்த அந்தப் பெண்ணின் முகம் மகிழ்ச்சியால் பூரித்து, கண்களில் நீர்நிறைய அன்னையின் காலடியில் வீழ்ந்து வணங்கினாள். அன்னை தம் மகளை வாரி எடுத்து, வங்காளத்தில் சொந்த மகள் வீடு வந்ததும் அவள் மோவாய்க்கட்டையைத் தொட்டு முத்தமிடும் வழக்கப்படி அவளுடைய மோவாயைத் தொட்டு முத்தமிட்டார்.



இதற்குள் அந்தப் பெண்ணின் கணவனும் அன்னையை வீழ்ந்து வணங்கினான். அளவற்ற அன்போடு அவனையும் அன்னை வரவேற்று ஆசீர்வதித்தார்.

அந்தப் பெண் தன் குழந்தைகள் அனைத்தையும் அன்னையின் திருவடிகளில் கிடத்தினாள். அன்னை குழந்தைகளுக்கு ஆசி கூறி அன்போடு அணைத்துக் கொண்டார்.

சிறிது நேரத்திற்குள் அன்னையின் அன்புவெள்ளம் அந்தக் குடும்பத்தைச்

சூழ்ந்துகொண்டது. அவர்கள் நிலையே முற்றும் மாறிவிட்டது. மகள் தன் தாய்வீடு தேடி நெடுந் தொலைவு வந்திருக்கிருள். வீட்டில் தாய் இருப்பதையும் கண்டுவிட்டாள். பிறகு அவளுடைய மகிழ்ச்சிக்கும் தேவைகளின் கவனிப்பிற்கும் அளவேது? அவளுடைய குழந்தை நோயால் வருந்திளுல்தான் என்ன? அதுவும் அவள் தேடி வந்த தாய் சாதாரணத் தாய் அல்லவே. உடலையும் உயிரையும் வாட்டும் கடக்க முடியாத கொடிய சம்சாரத் துயரங்களையே நீக்கி அளவற்ற ஆனந்தத்தைத் தரும் தாய் அல்லவா?

அன்னையின் அறைக்கு எதிரே இருந்த வராந்தாவில் பாய் விரித்தனர். அதன் மேல் படுக்கை ஒன்று போடப்பட்டது. குழந்தை அதன் மேல் படுக்க வைக்கப் பட்டது.

சிறிது நேரத்திற்குள் பால் கொண்டு வந்தனர். மலேரியா காய்ச்சலுக்கான மருந்தும் கொண்டு வந்தனர். பாலோடு அது சிறிது சிறிதாகக் குழந்தைக்குக் கொடுக்கப்பட்டது.

அதற்குள் அந்தப் பெண் தாற்காலிகமாகத் தங்க வீட்டில் ஓர் இடமும் கண்டு பிடிக்கப்பட்டது. அவள் தன் சொந்த வீட்டில் இருப்பது போலத் தயக்கமில்லாமல் வீடு முழுவதும் போகவும், எல்லோரிடமும் பழகவும் எல்லாக் காரியங்களும் செய்யப்பட்டன. வீட்டிலுள்ள பெண்கள் அனைவரும் அவளிடம் வந்து அன்போடு பேசினுர்கள்; வீட்டின் பல பகுதிகளுக்கும் அழைத்துச் சென்றுர்கள்.

தாயின் வீட்டில் மகளுக்கு என்ன தயக்கமும் பயமும்? சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டிலுள்ள மற்றச் சகோதரிகளுடன் மிகவும் மகிழ்ச்சியாகக் கலகலவென்று சிரித்துப் பேசியபடி, இடுப்பில் குடத்தோடு அந்த மகள் ஊரின் கோடியிலுள்ள குளத்தில் குளித்துவிட்டுத் தண்ணீர் கொண்டுவரச் சென்றுள்.

அவளுடைய கணவனுக்கும் அன்னையின் மகன்கள் தங்கியிருந்த அருகிலுள்ள வீட்டில் வசதியான இடம் கிடைத்தது. அவனும் மிகுந்த மகிழ்ச்சியுடன் அன்னையின் மற்ற மகன்களோடு குளிப்பதற்காக ஊரின் மற்றொரு புறத்தில் இருந்த குளத்தை நோக்கி நடந்தான்.

அன்னை ஸ்ரீராமகிருஷ்ணரின் பூஜையைச் செய்து முடித்தார். பிறகு அந்தத் தம்பதிகளுக்குத் தன் எல்லையற்ற கருணையால் மந்திர தீட்சை தந்தார். அந்தத் தம்பதிகளின் மனதில் பல ஆண்டுகளாக நினைவாகத் தோன்றி, ஆசையாக வளர்ந்து, ஏக்கமாக மாறித் துடிப்பாகத் துடித்து வந்த லட்சியம் மந்திர தீட்சை பெற்றதன் மூலம் நிறைவேறிவிட்டது. அளவற்ற பேரானந்தத்தில் மூழ்கினர். அவர்கள் எந்தப் பலனைப் பெற மனிதப்பிறவி எடுத்தார்களோ அந்தப் பலனைப் பெற்றுவிட்டனர்.

இப்போது அன்னை தன் பிள்ளைகள் அனைவரையும் வராந்தாவில் உட்கார வைத்தார். தமது புதிய மகளையும் உட்கார வைத்து, குருதேவர் பிரசாதத்தை அனைவருக்கும் காலையுணவாகத் தந்தார். பிறகு தம் மகள்களோடு தாமும் அமர்ந்து காலையுணவை உண்டார்.

வேலைக்காரர்களுக்குச் சாப்பாடோ சம்பளமோ வெகு தாமதமாகக் கொடுத்தால் அவர்கள் தங்கள் எஜமானர் மீது கோபம் கொள்வார்கள். இந்தக் கோபம் எஜமானர்களுக்குக் கெடுதலாக முடியும்.

---

செல்வம் கிடைத்ததன் பயனுக அதை அனுபவிக்க வேண்டும்; தானமும் செய்ய வேண்டும். சாஸ்திரங்களைப் படிப்பதன் பயனுக நல்ல குணங்களும் நல்ல நடத்தையும் ஏற்பட வேண்டும்.

---

இரண்டு தீமைகளில் மிகவும் குறைவான ஒன்றைத் தேர்ந்தெடு.

—எராஸ்மஸ்

அன்றைக்கு அன்னையைக் காண மேலும் பல பக்தர்கள் வந்தார்கள். அவர்கள் அன்னைக்கு அரிசி, காய்கறி முதலியவற்றை அங்கே கூடியிருந்த பக்தர்களுக்கு உணவு சமைத்து அளிக்கக் கொண்டு வந்திருந்தார்கள். இல்லை யென்றால் அவர்களுடைய ஏழை அன்னை அத்தனை பேருக்கும் சோறு போடுவது என்பது எப்படி முடியும்?

காலைச் சிற்றுண்டியை முடித்ததும் அன்னை சமையலறைக்குள் நுழைந்து, காலையிலிருந்து சமையல் வேலையைக் கவனித்து வந்த தமது சமையல்கார அத்தையைக் குளிக்கவும், உணவு கொள் ளவும் வழக்கம் போல அனுப்பினர். விடியற்காலையில் எழுந்துகொள்ளும் அன்னை வீட்டுவேலை முழுவதையும் தாமே கவனித்துக் கொள்வார். ஆனல் இப்போது உடன் இருக்கும் மகள்கள் அவரை அதிகமாக வேலை செய்ய விடுவ தில்லை. சமையல் வேலையிலும் அவர்கள் வந்து உதவுவார்கள். அன்றைக்கும் அவர்கள் உதவினர்கள்.

அன்றைக்கு அன்னையைக் காண வந்தி ருந்த அவருடைய குழந்தைகளின் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்த தனல், சமையலை முடிக்கவும் பரிமாற வும் பகல் இரண்டு மணிக்கு மேல் ஆகி



விட்டது. எல்லோரும் அமர்ந்து சாப்பிட் டார்கள். அந்தத் தம்பதிகளும் சாப்பிட் டார்கள். சாப்பிட்டவுடனே நெடுந் தொலைவில் இருந்த தங்கள் வீட்டிற்குப் புறப்பட்டுவிட்டார்கள். அன்னை அன்று இரவு தங்கிச் செல்லுமாறு கூறியும் அவர்களால் தங்கிச் செல்ல முடியவில்லை.

—அடுத்த இதழில் முடியும்

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 90,001 முதல் 90,685 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஆகஸ்ட் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ.15ஐ ஆகஸ்ட் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேம்.

* சந்தா எண் 1,00,005 முதல் 1,00,436 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை செப்டம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,10,001 முதல் 1,10,745 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை அக்டோபர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,20,001 முதல் 1,20,385 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை நவம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனல் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

நிர்வாகி,

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

புதிய தொடர்



# குயிலே, கூவுவாய்

**கி.வா.ஜகந்நாதன்**

திருவாசகத்தில் ஒரு பகுதி 'குயில் பத்து'. அதற்கு, கி.வா.ஜ. அவர்கள் எழுதும் விளக்க வுரை இந்த இதழில் துவங்குகிறது.

மாமரங்கள் அடர்ந்த சோலே; அங்கே பறவைகள் கூவித் திரிந்து விளையாடிக் கொண்டிருக்கின்றன. அவற்றின் குரலுக்கெல்லாம் மேலே 'குக்கூ, குக்கூ' என்று இனிய ஒலியை எழுப்பிக்கொண்டு ஒரு குயில் அமர்ந்திருக்கிறது. மாணிக்க வாசகர் பெருமான் அந்தச் சோலையில் புகுகிறார். அந்தக் குயிலின் இன்னொலி அவர் காதுக்குள் இன்பம் புகுத்துகிறது. அது வெறும் குரலாக மாத்திரம்தான் இருக்கிறது. அதற்குப் பொருளும் இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்! அந்தக் குயிலைப் பார்த்துப் பேசுகிறார். அந்தக் குயில் கேட்கிறதோ, இல்லையோ, அது வேறு விஷயம். அவர் தம்முடைய உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துகிறார்.

'கீதம் இனிய குயிலே!' என்று விளிக்கிறார். 'உன் கீதம் எவ்வளவு இனிமையாக இருக்கிறது! ஆனல் அதனேடு மற்றென்றும் சேர்ந்தால் எவ்வளவு அற்புதமாக இருக்கும் தெரியுமா? அதை நான் சொல்கிறேன்; கேட்கிருயா? அப்படிக் கேட்பதாக இருந்தால் நீ என்ன கூவ வேண்டும் என்று சொல்கிறேன்.'

குயில் தலையை ஆட்டுவது போலத் தோன்றுகிறது. மாணிக்கவாசகர் குயிலைப் பார்த்துப் பேசத் தொடங்குகிறார்—

எங்கள் பெருமானை வரும்படி நீ கூவ வேண்டும். அதனல் உன் பிறவியே பயன் அடையும். அவன் எத்தகையவன் தெரியுமா? அவனுடைய திருவுருவத்தை எப்படி எடுத்துரைப்பது? அவனுடைய திருவடிகளைக் காணப்போனல் பாதாளம் ஏழுக்கும் கீழே போக வேண்டியிருக்கும். திருமால் அதைத் தேடிப் போய்த் திணறிய கதை உனக்குத் தெரியுமா? நமக்குக் கீழான இடம் என்ருல் ஏழு பாதாளங்கள்தாம் தெரியும். அவன் திருவடிகள் அந்தப் பாதாளங்கள் ஏழுக்கும் அப்பால் உள்ளன.

கீதம் இனிய குயிலே, கேட்டியேல்,
எங்கள் பெருமான்
பாதம் இரண்டும் வினவிற் பாதாளம்
ஏழினுக்கு அப்பால்.

அவன் திருவடியைப் பற்றிக்கொள்ள முடியவில்லையே! இனி, திருமுடியை யாவது காணலாமோ என்ருல் அதுவும் நடவாத காரியம். சோதிவீசும் மாணிக்கங்களால் அமைந்தது அந்தத் திருமுடி.

அதைப்பற்றிச் சொன்னல் அது சொல்லில் அடங்காது. அவன் திருமுடிகள் எத்தனை? நமக்குத் தெரியாது. சொல் இறந்து நின்ற முடிகள் அவை.

தலைமை பெற்றவர்கள் மணிமுடி தரித்திருப்பார்கள். எம்பெருமானும் மணிமுடி தரித்தவன்தான். ஆனல் அவன் யாவரினும் உயர்ந்தவன் என்பதை அந்த மணிமுடியே காட்டிவிடும். எல்லோருடைய முடிகளுக்கும் மேலே உயர்ந்து தோன்றுகிறது அந்தத்திருமுடி. அது மாத்திரமா? எத்தனை காலமாக அவன் அந்த முடியைச் சூடியிருக்கிருன்? அவன் பிறந்த நாள் யாருக்குத் தெரியும்? அவன் அநாதி அல்லவா? அவனுக்குப் பிறப்பு ஏது? அநாதிகாலமாக அந்த மணிமுடியை அவன் புனைந்திருக்கிருன். அது சொல் இறந்து நின்றதொன்மையை உடையது. எத்தனையோ முடிகள் உயர்ந்து நின்றும் பின்பு தாழ்ந்தும் வீழ்ந்தும் போக, அவற்றுக்கெல்லாம் சாட்சியாக இந்த முடி உயர்ந்து ஓங்கிச் சோதி வீசிக்கொண்டு திகழ்கிறது. அந்தத் தொன்மையைக் கணிக்க யாராலும்முடியாது. அவனுடைய முடி தொன்மையைக் காட்டுவதென்ருல் என்ன பொருள்? அவன் மிகவும் தொல்லோன் என்பதை அதனுல் அறிந்துகொள்ளலாம். அவனே எல்லாவற்றுக்கும் ஆதியாக நிற்பவன். தனக்கு ஓர் ஆதி இல்லாதவன்.

சொல் இறந்து நின்ற தொன்மை ஆதி.

அவன் குறிகுணம் ஒன்றும் இல்லாதவன். என்ருலும் அடியவர்களுக்குத் திருவருள் பாலிக்கும்பொருட்டுத் திருவுருவத்தோடும் அனந்த கல்யாண குணங்களோடும் எழுந்தருள்வான். அவனுக்கு முடிவே இல்லை. முடிவான எல்லாவற்றுக்கும் முடிவாக நிலைத்து நிற்பவன், ஆதியாக உள்ள எல்லாவற்றுக்கும் ஆதியாக விளங்குபவன்.

ஆதி குணம் ஒன்றும் இல்லான் அந்தம்
இல்லான் வரக் கூவாய்.

அந்தப் பெருமானை எழுந்தருளும்படி நீ கூவ வேண்டும். உன் குரலினிமையைக் கேட்டு அவன் வருவான். நாங்கள் செய்யும் துதிகள் இனிமை உடையன அல்ல; எங்கள் குரல் உன் குரலைப் போல இல்லையே! ஆகவே நீ அவனை எண்ணி அவனை வரும்படி கூவுவாயாக.



கீதம் இனிய குயிலே, கேட்டியேல்,
எங்கள் பெருமான்,
பாதம் இரண்டும் வினவிற் பாதாளம்
ஏழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லிற் சொல் இறந்து
நின்ற தொன்மை
ஆதி, குணம் ஒன்றும் இல்லான், அந்தமில்
லான்வரக் கூவாய்.

[பாடல் இனிமையாக உள்ள குயிலே. நான் சொல்வதைக் கேட்பதாயின் சொல்கிறேன், கேள். நீ எம்பெருமானைக் கூவு. அவன் பாதம் இரண்டையும் பற்றி வினவினால், அவை ஏழு பாதாள லோகங்களுக்கும் கீழே உள்ளன. எல்லாவற்றிற்கும் ஆதாரமாக நின்று தாங்குவன. சோதி நிறைந்த மணி முடியைப்பற்றிச் சொல்லப் போனால், அது சொல்லுக்கு அப்பாற்பட்ட பழமை யானது. அதற்கு முன் தோன்றியது ஏதும் இல்லை. அவன் எல்லாவற்றிற்கும் ஆதியாக நிற்பவன். குணம் ஏதும் இல்லாத நிர்க்குணன். அவனுக்கு ஆதி எப்படி இல்லையோ அதுபோல அந்தமும் இல்லாதவன். அவனை வரும்படி நீ கூவு வாயாக. கேட்டியேல்-கேட்பாயானால்.]



## உன்னை எண்ணிப் பார்

பலர் கூடும் சந்தையருகே ஒரு பிச்சைக்காரன் பல வருடங்க ளாகப் பிச்சையெடுத்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அவன் யாரையுமே வாய் திறந்து எதுவும் கேட் பதில்லை. தனது வலக் கையை நீட்டியவாறு காலை முதல் மாலை வரை நிற்பான். விரும்புபவர்கள் அவனது கையில் நாணயங்களைப் போட்டுச் செல்வார்கள்.

ஒரே இடத்தில் நின்றவாறே ஐம்பது வருடங்களுக்கு மேல் பிச்சை எடுத்துக்கொண்டிருந்த அவன் ஒரு நாள் திடீரென்று செத்து விழுந்தான். அந்த ஊர் மக்களுக்கு மிகுந்த அனுதாபம் ஏற்பட்டது. பிச்சைக்காரர்களில் இவன் ஒரு தனி ரகம். ஆகவே இவனுக்கு நினைவுச் சின்னமாக ஒரு சிலை வைக்க வேண்டும் என்று தீர்மானித்துப் பலரிடம் நிதியும் வசூலித்தனர்.

அந்தப் பிச்சைக்காரன் நின்றுகொண்டிருந்த இடத்தில் சிலை வைக்கக் கடைக்கால் தோண்டினார்கள். டங்டங் என்று சப்தம் வரவே வேகமாகத் தோண்டிப் பார்த்தனர். ஒரு செப்புக்குடமும் அதில் ஏராள மான தங்க வெள்ளி நாணயங்களும் இருந்தன. அதைப் பார்த்த கூட்டத்தில் ஒருவர், ''பார்த்தீர்களா! இந்தப் பிச்சைக்காரன் தன் கால்களின் கீழே புதையல் இருப்பதை அறியாமல் போவோர் வரு வோரிடம் எல்லாம் பைசாவிற்காகக் கையேந்தி நின்றிருந்தே செத் தான்'' என்றார்.

அந்த வழியாக வந்த ஒரு துறவி கூட்டத்தைப் பார்த்து அமைதியாகச் சொன்னார்—''ஆமாம், இப்படித்தான் ஒவ்வொரு மனித னும் தன் மனதில் குவிந்திருக்கும் திறமையையும் மகிழ்ச்சியையும் இன்பத்தையும் தெய்வத்தையும் அறியாமல் அவைகளெல்லாம் வெளியே எங்கேயோ கிடைக்கும் என்று வீணாகக் காலத்தைக் கழித்து விடுகிறார்கள்!''

துறவியின் கருத்தைச் சிந்தித்தபடியே கூட்டம் மெதுவாகக் கலைந்தது.

—ராஜாராம்



# நூல் அறிமுகம்



**1. தெய்வீகப் பெண்மணிகள்**

சாவித்திரி, வெங்கம்மா, காரைக் காலம்மையார், பைரவி பிராம்மணி, அன்னை ஸ்ரீ சாரதாதேவியார், ஆண்டாள், மீராபாய் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைச் சித்திரிக்கும் நூல். பக்கம் 164—ரூ. 8

ஆசிரியர் : திருமருகல் சிங்காரவேலனூர்

**2. உலக மதங்களின் வரலாறு**

இந்துமதம், பௌத்தம், சமணம், கிறிஸ்தவம், இஸ்லாம், சீக்கியம், பார்ஸி, யூத மதங்களைப் பற்றிய நூல். பக்கம் 196—ரூ. 12

ஆசிரியர் : தேவகோட்டை பி. நாராயணன்

மேற்கூறிய இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: புத்தகப் பூங்கா, 29, நல்லண்ண முதலி தெரு, இராயப் பேட்டை, சென்னை-600014.

**3. ஸ்ரீவித்யா—மணிமலர்**

ஸ்ரீவித்யைக் கட்டுரைகளோடு ஷண் மதங்கள் பற்றிய கட்டுரைகள் அடங்கிய நூல். பக்கம் 338—ரூ. 20

தொகுப்பாசிரியர் : நஜன்

பிரதிபா பிரசுரம், 38, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600004.

**4. ஸ்ரீஆதிசங்கரர் வரலாறு**

வரலாற்றுடன் பூஜை, உபதேசம், தோடகாஷ்டகம் அடங்கிய நூல். பக்கம் 12—ரூ. 1

பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை-600033.

**5. இராமாயணம்**

துளசி இராமாயணத்தைப் பின்பற்றி வெளிவந்துள்ள நூல். பக்கம் 316—ரூ. 35.

**6. மகாபாரதம்**

பக்கம் 436—ரூ. 45

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் எழுதியவர் : தமிழன்பன்

சமுதாயம் பிரசுராலயம், கோவை.

**7. ஆழ்வார்களின் அருளிச்செயலமுதம்**

ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களி லிருந்து முக்கியமான பாசுரங்களை இந்த நூலில் தொகுத்துள்ளனர். பக்கம் 48—ரூ. 5.

திருமலை இராமாநுஜன் 2, அஜிஸ் நகர் முதல் தெரு, கோடம்பாக்கம், சென்னை 600 024.

**8. தியானமும் யோகமும்**

ராஜயோகம் பற்றிய நூல். பக்கம் 112—ரூ. 7

**9. ஏழுமலையான்**

வேங்கடாசலபதியைப் பற்றிய புரா ணக் கருத்துக்களையும் திருப்பதி க்ஷேத் திரத்தின் மகிமையையும் விளக்கும் நூல். பக்கம் 96—ரூ. 5-50

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல் களுக்கும் ஆசிரியர் : மிழலைத் தொண்டன்

மேற்கூறிய இரண்டு நூல்களையும் வெளியிட்டோர்: சங்கீதவாணி, 91, வி.எம். தெரு, மயிலாப்பூர், சென்னை-600004.

**10. பக்தி-ப்ரபத்தி**

பக்தியையும் சரணாகதியையும் விளக் கும் நூல். ஸ்ரீராமகிருஷ்ண விஜயத் தில் வெளிவந்த சில கட்டுரைகளையும் நூலாசிரியர் இதில் சேர்த்துள்ளார். பக்கம் 126—ரூ.5

ஆசிரியரும் பதிப்பாளரும் :

சி.வி. சிவராமகிருஷ்ணன்

17, ராமர் கோயில் தெரு, ஓசூர்—635109.








ஓர் அன்பர், கன்னியாகுமரி

கேள்வி: விதியை மாற்றவோ அல்லது குறைக்கவோ இயலுமா?

பதில் : ஜபம், தவம், தானம் முதலியவற்றிஞல் விதியின் வலிமையைக் குறைப்பது சாத்தியம்; வெல்லுவதும் சாத்தியம். இதற்கு மார்க்கண்டேயன், சாவித்திரி ஆகியோரை உதாரணமாகச் சொல்ல லாம்.

டி. வடிவேல், சிதம்பரம்

கேள்வி : இருள் மார்க்கம், ஒளி மார்க்கம் ஆகியவை குறித்து விளக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

பதில் : இருள் மார்க்கம், ஒளி மார்க்கம் என் பவை பகவத் கீதையில் எட்டாவது அத்தியாயத்தின் முடிவில் சொல்லப்பட்டுள்ளன.

கர்ம காண்டத்திலேயே பற்றுள்ளவர்கள் இறந்தபிறகு இருள் மார்க்கத்தில் சென்று, மீண்டும் உலகில் பிறவியை அடைகின்றனர்; ஞானமும் பக்தி யும் மிக்கவர்கள் ஞானம் ஒளிவிடும் ஒளி மார்க்கத் தில் சென்று, படிப்படியாக உயர்ந்த உலகங்கள் சென்று, முக்தி அடைகின்றனர். அவர்கள் மானிட உலகிற்கு மீண்டும் திரும்பி வருவதில்லை—என்று உப நிஷதம், கீதை முதலிய சாஸ்திரங்கள் கூறு கின்றன.

திருமதி வி. லட்சுமி, பாண்டிச்சேரி

கேள்வி: இரவு நேரங்களில் 'நாராயணு' என்ற நாமத்தை யும் 'ராம' என்ற நாமத்தையும் சொல்லக் கூடாது என்கிருர் களே, இது சரிதானு?

பதில்: பகவானின் நாமத்தைச் சொல்வதற்கு எல்லா நாளும் நல்ல நாள்தான், எல்லா நேரமும் நல்ல நேரம்தான். இஷ்ட தெய்வத்தின் எந்த நாமத்தையும் எக்காலத்திலும் ஓதலாம். இதற்கு 'நாராயணு,' 'ராமா' ஆகிய நாமங்கள் விதிவிலக் கல்ல.

'எந்தக் காலத்திலும் எந்த நிலையிலும் கவலை இல்லாமல் பகவானைத்தான் பஜிக்க வேண்டும்' என் கிருர் தேவரிஷி நாரதர்.

'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உய்விப்பது நாதன் நாமம்' என்பது நாவுக்கரசரின் நல்வாக்கு.

'துஞ்சலும் துஞ்சலில்லாத போழ்தினும் நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தோறும்' என்பது திருஞானசம்பந்தர் வாக்கு.

'இரவு நேரங்களில் ஆஞ்சனேயர் ராமருடைய தியானத்தில் ஈடுபட்டிருப்பார். அத்தகைய நேரங்களில் நாம் ராமநாமம் சொன்னல், ஆஞ்சனேயரின் தியானம் கலைந்து, ராமநாமம் சொல்லப்படும் இடத்திற்கு, ஓடிவந்துவிடுவார். அவரது தியானத்திற்கு இடையூறு ஏற்படும் வகையில் இரவுநேரத்தில் நாம் ராமநாமம் சொல்லக்கூடாது' என்ற கருத்து சிலரிடையே நிலவுகிறது. இது குழந்தைகளுக்குக் கதை சொல்வது போல் இருக்கிறது; அர்த்தமற்றது.

சி. பொற்கொடி, அயனுவரம்

**கேள்வி:** பெண்கள் 'ஓம்' என்ற ஒரேழுத்து மந்திரத்தை உச்சரிக்கலாமா?

**பதில்:** அது மந்திரமாதலால் உபதேசிக்கும் குரு அனுமதித்தால் உச்சரிக்கலாம். குரு உத்தரவளித்தால் பெண்களுக்கும் அதிகாரம் உண்டு—இது ஒரு பதில்.

ஓங்காரத்தை உச்சரிப்பதில் எல்லோருக்கும் அதிகாரம் உண்டு; இதில் ஆண் பெண் என்ற வேறுபாடு பாராட்டுவது அர்த்தமற்றது—இது ஸ்ரீராமகிருஷ்ணர், விவேகானந்தர் வழியில் அமைந்த மற்ருெரு பதில்.

பிரபாகரன், ஹைதராபாத்

**கேள்வி:** ஆதிகாரிக புருஷர் என்பது யாரைக் குறிக்கிறது? அத்வைத வேதாந்தத்தில் இந்தக் கருத்து இடம் பெற்றிருக்கிறது என்று யாரோ சொல்லக் கேட்டிருக்கிறேன். அது உண்மையானல் அத்வைத வேதாந்தத்திற்கு இந்தக் கருத்து எவ்விதம் பொருந்தும்?

**பதில் :** ஆதிகாரிக புருஷர் ஒரு செயலைச்செய்யும் தகுதி படைத்து அந்தச் செயலைச் செய்ய இறைவனல் நியமிக்கப்பட்டவர்.

ஸ்ரீராமகிருஷ்ணரால் அது போன்ற அதிகாரம் ஞானத்தை உலகில் பரப்ப விவேகானந்தருக்கு அளிக்கப்பட்டது. ஆகையால் விவேகானந்தரும் ஆதிகாரிக புருஷர் ஆகிருர்.

நாரத மகரிஷி ஓர் ஆதிகாரிக புருஷர்.

நம்முடைய அரசாட்சியில் அரசின் கட்டளைகளை நிறைவேற்ற நியமிக்கப்பட்டவர்கள் அதிகாரிகள். அது போன்று இறைவனுடைய அரசாட்சியில் தெய்வப் பணிகளை நிறைவேற்ற இறைவனல் நியமிக்கப்பட்டவர்கள் ஆதிகாரிக புருஷர்கள்.

ஆதிசங்கரருக்கு ஆதிகாரிக புருஷர் பற்றிய கருத்து உடன்பாடானது.

ஆர். சுரேந்திரன், திண்டுக்கல்

**கேள்வி :** யந்திர ஜபம், மந்திர ஜபம், நாம ஜபம் ஆகியவற்றுக்கு ஒரே அர்த்தமா? அல்லது வெவ்வேறு பொருள் உண்டா?

**பதில்:** யந்திர ஜபம் என்று ஒன்றுமில்லை. யந்திர பூஜைதான் உண்டு. யந்திரம் என்பது வரிவடிவத்தில் ஒரு மந்திரத்திற்கு உள்ள உருவம். அந்த உருவம் ரிஷிகளால் காணப்பட்டது. இதற்கு உதாரணம்: ஸ்ரீசக்ரம்.

மந்திரம் என்பது சிவ பஞ்சாக்ஷரி, நாராயண அஷ்டாக்ஷரி, காயத்ரி போன்றவை. இவை போன்ற மந்திரங்கள் எத்தனையோ நூற்றுண்டுகளாகப் பரம்பரையாக நமது நாட்டில் இறை வழிபாட்டில் பழக்கத்தில் உள்ளவை. ஏற்கெனவே முறைப்படி உபதேசம் பெற்ற ஒருவரிடமிருந்து உபதேசம் பெற்று இவற்றை ஜபம் செய்தால் ஆன்மிக வாழ்க்கையில் முன்னேற உதவும்.

நாம ஜபம் மந்திரமாகவும் இருக்கலாம்; மந்திரம் இல்லாமல் நாம் வழிபடும் தெய்வத்தின் பெயராகவும் இருக்கலாம். உதாரணமாக, 'முருகா' என்பது மந்திரம் அன்று; ஆனல் நாமம். 'முருகா, முருகா' என்று திருப்பித் திருப்பி அதைச் சொல்லி முருகனை உள்ளத்தில் நிறுத்துவது நாம ஜபம். ■



சிறுவர் பகுதி

# தெய்வ காரியத்துக்கு ஒரு கருவி

'வால்மீகி'

பிரம்மாவின் சிருஷ்டியில் முதலில் தோன்றியவர்கள் சனத்குமாரர்கள். அவர்கள் பல ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்பும் சிரஞ்சீவிகளாக என்றும் பாலர்களைப் போலவே காட்சி கொடுப்பவர்கள்.

ஒரு சமயம் நாராயணனைத் தரிசிக்க அவர்கள் வைகுண்டத்துக்கு வந்தார்கள்.

வைகுண்டத்தின் தலைவாசலிலே இரு காவலர்கள் இருந்தார்கள். அவர்களின் பெயர் ஜயன், விஜயன். இன்றைக்கும் ஆலயங்களில் கர்ப்பக்கிருகத்துக்குள் போவதற்கு முன்னால் வாசலில் இரு சிலைகளைக் காணலாம். அவர்களைத் துவாரபாலகர் என்பர்.

திருமாலின் துவாரபாலகர்களுக்கு ஜயன், விஜயன் என்று பெயர். சிவபிரானின் துவாரபாலகர்களுக்குச் சண்டன், பிரசண்டன் என்றும், அம்பாளின் துவாரபாலகிகளுக்கு ஹரபத்ரா, சுபத்ரா என்றும் பெயர்.

சனத்குமாரர்கள் திருமாலைச் சந்திக்க வைகுண்டத்துக்கு வந்த போது, அவர்களை ஜய விஜயர் என்ற துவாரபாலகர்கள் தடுத்து நிறுத்தினார்கள்.

அவர்களுடைய அனுமதி பெற்றே இறைவனின் சந்நிதிக்குள் நுழைய வேண்டுமென்பது நியதி. சாதாரணமானவர்களுக்கு உரிய இந்த நியதியைப் பிரம்மஞானிகளான சனத்குமாரர்கள் பின்பற்றவில்லை. பிரபஞ்சத்தில் தங்குதடையின்றிச் சுதந்திரமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் அவர்கள், ஜய விஜயர்களின் அனுமதியைப் பெறாமல் வைகுண்டத்தில் நுழையவே அவர்களை ஜய விஜயர்கள் தடுத்து நிறுத்தினார்கள்.

எந்தச் சூழ்நிலையிலும் கோபிக்காத சனத்குமாரர்களுக்கே இப்போது கோபம் வந்துவிட்டது.

''பாலர்களும் தபஸ்விகளுமான எங்களால் உன் எஜமானருக்கு அபாயம் நேரிடுமென்று அஞ்சி எங்களைத் தடுத்து நிறுத்துகிறீர்களா? உங்களைப் போன்ற அறிவிலிகள் பகவானுக்குப் பணிவிடை செய்யத் தகுதியற்றவர்கள். முறை தெரியாமல் எங்களைத் தடுத்த நீங்கள் இருவரும் வைகுண்டத்தைத் துறந்து, மண்ணுலகில் பிறந்து ஆசா பாசங்களுடன் உழலக்கடவீர்!'' என்று சனத்குமாரர்கள் சாபம் கொடுத்தனர்.

அந்தச் சமயம் பார்த்து, பகவானும் மகாலட்சுமியுடன் அங்கு வந்தார். அவரிடம் சனத்குமாரர்கள் கொடுத்த சாபத்தைப் பற்றி ஜய விஜயர் முறையிடலானுர்கள். ஆனுல் பகவான் சொன்னுர்—

"துவாரபாலகர்களே! பிரம்மஞானிகளாகிய சனத்குமாரர் களுக்குக் கோபம் வந்ததாகவோ அல்லது அவர்கள் சாபம் கொடுத்த தாகவோ இதுவரையில் நான் கேள்விப்பட்டதில்லை. அப்படியிருக்க உங்களுடைய கர்மகதியை அனுசரித்தே அவர்கள் சாபம் கொடுக்க நேரிட்டது. அவர்களுடைய சாபம் உண்மையில் அவர்கள் கொடுத்த சாபமல்ல. அடுத்த யுக யுகாந்தரங்களில் நடக்க வேண்டிய காரியங் களை அனுசரித்து உங்களுக்கு இந்தச் சாபம் ஏற்பட்டது. இதை நீங்கள் அனுபவிப்பதைத் தவிர வேறு வழியில்லை. நீங்கள் என் பக்தர்களாக மண்ணுலகில் நூறு ஜன்மம் எடுத்துவிட்டு என்னிடம் திரும்பி வந்து சேர விரும்புகிறீர்களா? அல்லது என் பகைவராக மூன்று ஜன்மம் எடுத்துவிட்டு என்னிடம் திரும்பி வந்து சேர விரும்புகிறீர்களா?'' என்று வினவினுர் பகவான்.



"உங்கள் பகைவனாக இருந்தாலும் பரவாயில்லை. மூன்றே மூன்று பிறவிகளுடன் இந்தச் சாபத்தைக் கழுவிக்கொண்டு வைகுண்டம் வரவே விரும்புகிறோம்" என்று ஜய விஜயர்கள் கூறவே, "அப்படியே ஆகட்டும்!" என்று திருவருள் புரிந்தார் பகவான்.

முதல் ஜன்மத்தில் ஹிரண்யனாகவும் ஹிரண்யகசிபுவாகவும் ஜய விஜயர் பிறந்தபொழுது, அவர்களை அழித்து ஆட்கொள்ளப் பகவான் வராக அவதாரமும் நரசிம்ம அவதாரமும் எடுத்தார். ராவண கும்பகர்ணர்களாக ஜய விஜயர் பிறந்தபொழுது பகவான் ராமாவதாரம் எடுத்தார். கம்சனாகவும் சிசுபாலனாகவும் ஜய விஜயர் பிறந்தபொழுது அவர்களுடைய சாபத்தை முற்றும் நீக்கி ஆட்கொள்ளப் பகவான் கிருஷ்ணனாக அவதரித்தார்.

# செய்திகள்

☐ தமிழ்நாடு ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்தப் பேரவையின் நான்காவது ஆண்டுவிழா ஆகஸ்ட் மாதம் 20, 21 ஆகிய சனி, ஞாயிறு இரண்டு நாட்கள் வடஆர்க்காடு மாவட்டம் நாட்றம் பள்ளி ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும். அன்பர்கள் இது குறித்து, 'தலைவர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், நாட்றம்பள்ளி-635852' என்ற முகவரிக்குத் தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

☐ அரக்கோணம், ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம் 'சுவாமி விவேகானந்தர் நர்சரிப் பள்ளி'யைத் துவக்கியுள்ளது.

☐ ஆர்க்காடு, ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயாவில் ஜூலை 3-ஆம் நாள் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பற்றிய சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. திருமதி பத்மினி, ஏ. சுப்ரமணியம், குமார், பாண்டுரங்கன், சுவாமி கமலாத்மானந்தர் ஆகியோர் உட்படப் பலர் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்து உரையாற்றினர்.

☐ விழுப்புரம், ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கத்தின் சார்பாக, 1-7-83 வெள்ளிக்கிழமை ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா ஆண்கள் உயர்நிலைப் பள்ளி, ஸ்ரீசாரதா வித்யாலயா பெண்கள் உயர்நிலைப் பள்ளி, ஸ்ரீராமகிருஷ்ணானந்தர் நர்சரிப் பள்ளி என்ற பெயர்களில் மூன்று பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டன. விழாவிற்கு நெய்வேலி பழுப்பு நிலக்கரிக் கார்ப்பரேஷன் தலைவர் G. L. டாண்டன் தலைமை வகித்துத் தலைமையுரை நிகழ்த்தினார். சுவாமி கமலாத்மானந்தர் பள்ளிகளைத் துவக்கி வைத்துச் சிறப்புரையாற்றினார்.

☐ மதுரை, ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமம் ஜூன் 25-ஆம் நாள் ஸ்ரீசாரதா நர்சரிப் பள்ளியைத் துவக்கியது.

☐ நாட்டறம்பள்ளி கிராமத்திலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடம் கிராம மக்களுக்கு நீண்டகாலமாகவே தண்ணீர் வசதியை செய்து தந்து வருகிறது.

அதன் ஓர் அங்கமாக இப்போது, கல்கத்தா சேவாநிதி டிரஸ்ட் வழங்கிய 75,000 ரூபாயில் இரண்டு ஆழ்கிணறுகள், பம்பு செட், மேல் தண்ணீர் தொட்டி ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன. இது சம்பந்தமாக ஜூலை 15-ஆம் நடைபெற்ற நிகழ்ச்சியில் சுவாமி தன்மயானந்தர், வடஆர்க்காடு மாவட்டத்தின் கலெக்டர் என். நாராயணன் ஆகியோர் கலந்துகொண்டனர்.




பரவசத்தோடு பக்திவழியில் உன்னைத் துதிக்கும் என்னிடம் ஏன் இவ்வாறு சோதனை? இனிமேல் சகிக்க மாட்டேன்; எங்கே போவேன்? யாரிடம் முறையிடுவேன்? வீண்பொழுதுபோக்க வேண்டுமா? சோதனை வேண்டாம்.

காமம் முதலிய எதிரிகளை அழித்து நிர்மூலமாக்கும் ஆற்றல் கொண்ட உன் சேவகனுகும் பணியில் என்னை அமர்த்துவாயா? உன் பக்தி மூலம் உண்டாகும் உடல் சிலிர்ப்பு என்ற கவசமும், அதன் மேல் ராமபக்தன் என்ற முத்திரையையுடைய பில்லையும், ராமநாமம் என்ற சிறந்த போர்வாளும் இந்தத் தியாகராஜனிடம் விளங்குகின்றன. ராமா! உன் சேவகனுகப் பணிபுரிய என்னையும் ஏற்றுக்கொள். ராமசந்திரா! உன் தயை வராததற்கு என்ன காரணம்? இது இரைச்சல் என்று என்னை மறந்தாயோ? அல்லது நீதான் இங்கு இல்லையோ?

தீய விஷயங்களை அனுபவிக்கும் மக்களின் உறவை நான் மேற்கொள்ள முடியாமல், உன் தயையை எதிர்பார்த்து என் உடல் பாதியாகிவிட்டது. சம்சாரக் கடலின் துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் தாமரையிலைத் தண்ணீர் போல் தத்தளிக்கும் என்னைப் பார்த்து உன் தயை வராதது ஏன்? எனக்கு வேறு யார் கதி? ராமா! உன்னைத் தவிரப் புகலிடம் எனக்கு வேறு யாருமில்லை. தீன சரண்யனே! மக்களைக் கடைத்தேற்றும் சரிதம் உடையவனே!

மனமே! காலம் விரைவாகக் கழிந்துவிடும்! நன்முயற்சியுடன் ராமனைத் துதிப்பாயாக. உறக்கத்தில் சில காலமும், இன்ப நுகர்ச்சியில் சில காலமுமாகப் பொழுது சுழல்கிறது. அதிகாலையில் எழுந்து மூவகைத் தாபங்களையும், மாந்தரையும் புகழ்ந்தது சில காலம்; அழகாகத் தோன்றும் சம்சாரக் கடலில் மூழ்கி மிதந்தது சில காலம்; மகிழ்ச்சியுடன் தன் செல்வம், மக்கள், வீடு முதலியவற்றைக் கண்டு பெருமையடைந்தது சில காலம்; அவை சிதறிப் போனால் துயரக் கடலில் ஆழ்ந்து துக்கமடைந்தது சில காலம்; பகவந்நாம சங்கீர்த்தனம் செய்வதே பாக்கியம் என்பதை அறியாமல் சில காலம்; இவ்விதம் ராமனின் தத்துவம் அறியாமல் காலம் விரைவில் கழிந்துவிடும். ஆகவே ஓ மனமே! ஸ்ரீராமனை இடைவிடாமல் துதிப்பாயாக.

மனமே! பிரகாசத்துடன் திகழும் மனம் என்ற பொற்பீடத்தில் ஸ்ரீராமனைப் பிரதிஷ்டை செய்துகொண்டு, சிறப்புறச் சிவ ராம நாமங்கள் என்னும் மலர்களால் அர்ச்சனை செய்யும் மனிதப்பிறவியே பிறவியாகும். பெண்களின் மேனியழகைக் கண்டு மோசம் போகாதே. அந்த வெளியழகு ஈனமான மலம் முதலியன நிரம்பிய மாயாமயமானது. அதைக் கண்டு மோசம் போகாமல், நீ பஜனை மார்க்கத்தைப் பின்பற்றிக் கடைத்தேறுவாயாக.

கே. ஆர். ஜனார்த்தன ராஜா

அன்றே வெளிவந்தது...






# மத்வரின் உபதேசங்கள்

ராமா ராவ்

மத்வரின் உபதேசங்கள் பின்வரும் சுலோகத்தில் சுருக்கமாக உரைக்கப் பட்டுள்ளன:

ஸ்ரீமந்மத்வமதே ஹரி: பரதர:, ஸத்யம்
ஜகத், தத்வதோ
பேதோ, ஜீவகணா ஹரேரநுசரா
நீசோச்சபாவம் கதா: ।
முக்திர் நைஜஸுகாநுபூதிரமலா,
பக்திச்ச தத்ஸாதநம்,
ஹ்யக்ஷாதித்ரிதயம் ப்ரமாணமகிலம்
ஜ்ஞானைகவேத்யோ ஹரி: ॥

அதாவது—மத்வ சித்தாந்தத்தில் ஹரி எனப்படும் விஷ்ணுவே பரம்பொருள்; இவ்வுலகம் உண்மையானது; தாரதம்யம் உண்மையானது; ஜீவன்கள் ஹரியைச் சார்ந்திருப்பவை; ஜீவனுக்குள் ஏற்றத் தாழ்வுகள் உண்டு; ஜீவாத்மாவின் ஆனந் தானுபவமே முக்தி எனப்படுவது; தூய பக்தியே முக்திக்குக் காரணம்; காட்சி, அனுமானம, சப்தம் ஆகிய மூன்றும் பிரமாணங்கள். வேதங்களின் மூலமாகத் தான் ஹரியை அறிய முடியும் என்பது மத்வரின் கருத்தாகும்.

இவை தவிர, ''எல்லாச் சப்தங்களும் முக்கியமாக இறைவனையே குறிக்கின் றன; இறைவனது அவதாரங்களுள் எத்தகைய வேறுபாடும் இல்லை'' என்று மத்வர் கூறுகிறார்.

மத்வர் மோட்சம் அடைவதற்கு வேண்டிய சாதனமாக, ''ஹரியின் திரு வடிகளில் குவிந்த மனதுடன் உன் கடமையைச் செய். தவிர்க்க முடியாத பூர்வஜன்ம கர்மபலனை அனுபவி. ஹரியே உயர்ந்தவர். ஹரியே குரு. ஹரியே உலகிற்குத் தாய், தந்தை, புகலிடம். புருஷோத்தமனான இறைவனைவிட வேறு எதுவும் உலகில் போற்றத்தக்கதில்லை. ஆகையால் எல்லாக் கவலைகளையும் விட்டொழி. மனதை ஈசனின் சரணார விந்தங்களில் செலுத்து. ஹரியின் பாதத்தை நினைக்க முயற்சி செய்யும் போதே எல்லாப் பாவங்களும் உடனே அழிகின்றன. நினைத்தாலோ உயர்ந்த மோட்சம் நம்மைத் தேடிவரும். அப்படி இருக்க அவரது சரணாரவிந்தங்களை நிரா கரிப்பதேனோ? எல்லாச் சேதன வஸ்துக்



களிலும் அவரே மிகவும் உயர்ந்தவர். இரண்டு கைகளையும் உயரத் தூக்கிச் சபதம் செய்து, தூய உயர்ந்த உண்மையைச் சொல்லுகிறேன், கேளுங்கள்: ஹரியைவிட உயர்ந்தவரோ, அல்லது ஹரிக்குச் சமமானவரோ ஒருவரும் இல்லை'' என்று தமது த்வாதச ஸ்தோத்திரத்தில் மூன்ருவது அத்தியாயத்தில் மத்வர் குறிப்பிட்டுள்ளார்.

வேருேர் இடத்தில், ஹரி எல்லையற்ற கல்யாண குணங்கள் நிறைந்த பூரணன் என்பதை, ''வேதம் என்னும் சாணையினுல் கூர்மையாகத் தீட்டப்பட்டுப் பளபளவென்று மின்னுகிற நல்ல மனம் என்னும் வாளால், மிகவும் பலம் பொருந்திய உள் - பகையாகிய அஞ்ஞானத்தை வெட்டி வீழ்த்து. ஆன்ம இருளை அகற்றும் ஈசனை, அனந்தனை ஹரியை, உபாசிப்பாயாக. அவர்தாம் உலகத்தைச் சிருஷ்டிக்கும் பிரம்மா, ருத்திரன், இந்திரன், சூரியன் முதலிய தேவர்களைச் சிருஷ்டிக்கிருர்; காக்கிருர்; அழிக்கிருர். தம்மை வணங்குபவர்க்குத் தம்முடைய பரமபதத்தையும் அருளுகிருர். நிறைந்தவையும் எண்ணற்றவையுமான உயர்ந்த குணங்களால் நிறைந்த லட்சுமிபதிக்குச் சமமாக உயர்ந்தவர் யாரும் இல்லை; இருந்ததும் இல்லை; இருக்கப் போவதும் இல்லை'' என்று குறிப்பிடுகிருர்.

பாகவதத்தில் பிரகலாதன் கூறிய சிறந்த பக்தியையே மத்வரும் உபதேசிக்கிருர். மத்வர் தமது சீடர்களுக்கு உபதேசித்தது—1. இறைவன் திருவிளையாடலைக் கேட்டல், 2. அவன் நாமத்தையும் குணங்களையும் பாடுதல், 3. எப்போதும் விஷ்ணுவை நினைவிலிருத்தல், 4. ஸ்ரீமூர்த்திகளுக்கும், சாளக்ராமங்களுக்கும், தூய பக்தர்களுக்கும் சேவை செய்தல், 5. மூர்த்திகளுக்கு அர்ச்சனை புரிதல், 6. வணங்குதல், 7. தன்னை இறைவனின் தொண்டனுக மதித்தல், 8. இறைவனைத் தன் சிறந்த நண்பனுக எண்ணுதல், 9. தன் ஆன்மாவையே அர்ப்பணம் செய்து 'எல்லாம் இறைவன் செயல்' என்று இருத்தல் ஆகிய ஒன்பதும் உண்மையான பக்தனின் இலக்கணம் என்று மத்வர் உபதேசம் செய்துள்ளார்.

பக்தி என்பது என்ன? பக்தி எப்போது வரும்? இந்தக் கேள்விக்கு மத்வர் பக்தியை வரையறுத்துப் பதில் சொல்கிருர்—''இறைவனது பெருமை பற்றிய ஞானத்துடன் கூடியதும், மற்ற எதனிடமும் காட்டப்படாமல் இறைவனிடம் மட்டும் காட்டப்படுவதுமான விசேஷ அன்பே பக்தி எனப்படும். முக்தி இத்தகைய பக்தியால் மட்டுமே கிடைக்கும்; வேறு வழியில் அல்ல'' என்று பக்திக்கு விளக்கம் தருகிருர்.

இத்தகைய பக்தி ஞானத்தாலேயே வரும். இந்த ஞானம் என்பது யாது? இதற்கு மத்வர் சுருக்கமாகக் கூறுகிருர்—''விஷ்ணுவின் எல்லாக் குணங்களும் உண்மையானவை; இறைவனுக்கும் ஜீவாத்மாவிற்கும் உள்ள பேதம் உண்மை; இறைவன் உண்மையானவன்; ஜீவாத்மாக்களுக்கிடையே உள்ள வேற்றுமை உண்மை; நாமம், பொருள்கள்,





தினமும் நீ மனிதன் மீது பட்டு விடக் கூடாது என்று ஒதுங்கி நகர்ந்தே போய்க்கொண்டிருக்கிருய். இது தகுமா? பெரும் தவறு செய்கிருய்! மனிதனை ஒதுக்கும் நீ அவனுள் சுயம் பிரகாசமாகத் திகழும் பகவானை நீ இகழ்கிருய், வெறுக்கிருய்—இந்த உண்மையை நீ அறியவில்லையே!

—கவி ரவீந்திரநாத் தாகூர்

---

செயல்கள் நிறைந்த இந்த உலகமும் உண்மை; விஷ்ணுவிற்கும் விஷ்ணுவின் அவயவங்களுக்கிடையேயும் குணங்களுக்கிடையேயும், விஷ்ணுவிற்கும் அவரது அவதாரங்களுக்கிடையேயும் வேற்றுமை உண்டு என்பதுதான் பொய். இறைவனிடம் வேறு எதுவும் பொய்யல்ல'' என்று கூறி, மேலும் அவர் பஞ்ச பேதங்களும் உடைய நித்யமான உலகச் சுழற்சி உண்மையே என்கிருர்.

'முக்தியில் வேற்றுமை காணப்படுவது எதனுல்?' என்ற கேள்விக்கு அவர், 'தத்பக்திதாரதம்யேந தாரதம்யம் விமுக்திகம்' அதாவது, 'பரமாத்மாவிடம் ஜீவாத்மாக்களால் செய்யப்படுகிற பக்தியின் வேறுபாட்டினுலேயே முக்தியில் ஏற்படும் ஆனந்த அனுபவத்திலும் வேற்றுமை காணப்படுகிறது' என்று கூறுகிருர்.

முக்தி என்பது ஒருவன் ஐம்பெரும் வேற்றுமைகளையும், விஷ்ணுவின் குண நலன்கள் அவயவங்கள் அவதாரங்கள் இவைகளில் ஐக்கியம் உண்டு என்பதையும், இறைவன் துர்க்குணமற்றவன் என்பதையும் புரிந்துகொண்ட பின்பே அவனுக்குக் கிடைக்கக்கூடியது; ஹரியின் அவதாரங்களையும் மற்றவர்களின் அவதாரங்களையும் புரிந்துகொண்ட பின்பே முக்தி கிட்டும்; அதற்கு முன்பு அல்ல.

படைத்தல், காத்தல், அழித்தல், ஞானம், பொறியடக்கம், அவித்தையினின்றும் சம்சாரத்தினின்றும் விடுபடல்—இவை விஷ்ணுவிடமிருந்து வருபவை என்று அறிந்த பின்பே முக்தி அடைய முடியும்.

வேதங்களையும், பாஞ்சராத்ரத்தையும், இதிகாசங்களையும், புராணங்களையும் கற்று, 'விஷ்ணுவே உயர்ந்தவன்' என்று உணர்ந்த பின்பே ஒருவன் முக்தி அடைய முடியும்.

இவை அனைத்தும் மத்வர் முக்திக்குக் கூறும் வழிகளாகும். 'கர்மம் செய்ய வேண்டுமா? வேண்டாமா?' என்ற கேள்விக்கு மத்வர், ''தொடர்ந்து செய்யும் வழிபாட்டினுலும், ஒருவனுடைய சக்திக்குத் தகுந்தவாறு பற்றின்றிக் கர்மம் செய்வதனுலும் எல்லோராலும் இறைவனைக் காண முடியும்; மற்ற விதங்களில் முடியாது'' என்று பதில் கூறுகிருர்.

'பக்தியே மோட்சத்திற்குக் காரணம் என்ருல், மோட்சத்தில் பக்தி மறைந்துவிடுமா?' என்ற சந்தேகத்திற்கு மத்வர், ''எல்லா நற்செயல்களும் பக்திஞானங்



இயற்கை அமைதியாக இருப்பதற்குக் காரணம், அவற்றினிடம் நிறைய உண்மைகள் இருக்கின்றன.

பணத்தைக் கெட்ட வழியில் இழப்பது குற்றம். கெட்ட வழியில் தேடுவது அதைவிடக் குற்றம்.

—ரஸ்கின்



களைப் பெருக்கவே விதிக்கப்பட்டுள்ளன. ஆனால் பக்தி வேறு முடிவுக்காக விதிக்கப் பட்டதன்று; எல்லா முயற்சிகளுக்கும் முடிவு அதுவே. முக்திக்குப் பின்னரும் பக்தி ஆனந்தம் தருவதாக இருக்கிறது'' என்று பிரம்மசூத்திர பாஷ்யத்திலும், நியாய விவரணத்திலும் விளக்குகிறார்.

இறைவன், பக்தி, கர்மம், ஞானம் இவைபற்றிய மத்வரின் சித்தாந்தமே மேலே கூறப்பட்டவை.

ஸ்ரீராமானுஜரைப் போலவே ஸ்ரீமத் வரும் சில சீர்திருத்தங்களைச் செய் துள்ளார்.

மத்வர் யாகங்களில் உயிருள்ள பிராணிகளைப் பலி கொடுப்பதை அறவே நிறுத்திவிட்டார். தம் சீடர்களுக்கு, பிராணிகளுக்குப் பதிலாக மாவால் செய்த பொம்மைகளைப் பலி கொடுக்கு மாறு உபதேசம் செய்தார். கோயில் களில் தேவதாசிகள் இருப்பதை மத்வர் தடுத்துவிட்டார்.

ஏகாதசி நாட்கள் தவறாமல் எல்லோ ரும் உபவாசமிருந்து, அன்றிரவு தூங்கா மல் இறைவனைத் துதித்துக்கொண்டிருக்க வேண்டும் என்பது மாத்வர்களால் முக்கியமாகக் கருதப்படுகிறது. கோகு லாஷ்டமி, ஸ்ரீராமநவமி ஆகிய புனித நாட்களைத் தவறாமல் கொண்டாடுவதும், குழந்தைகளுக்கு இறைவனது திருநாமங் களைச் சூட்டுவதும் மாத்வர்கள் தவறாது செய்பவை.

மத்வர் முக்தியை முதல் வர்ணத்தார் மட்டும் அடையக்கூடியதாகச் சொல்ல வில்லை. சாந்தோக்ய உபநிஷத் பாஷ் யத்தில் மத்வர், '' 'கற்றீண்டு மெய்ப் பொருள் கண்டால்' எல்லா வர்ணாச்ர மங்களைச் சேர்ந்தவர்களும், ஏன் சண்டா ளர்களும் தீண்டாதவர்களும் மற்றத் தாழ்ந்த மனிதருங்கூட முக்தியை நிச்சயமாக அடைய முடியும்'' என்று கூறுகிறார்.

'பக்தி, கர்மம் முதலியவை ஜீவாத் மாக்களால் செய்யப்பட வேண்டிய சாதனங்களே அன்றி, இறைவனின் அருள் இன்றி மோட்சம் கிட்டாது' என்பதைப் பிரம்ம சூத்திர பாஷ்யத் திலும், கீதை விளக்கத்திலும் மத்வர் குறிப்பிடுகிறார்.

இறைவன் அருள் நம் சுவாதீனத்தில் இல்லை என்றாலும், பக்தி, கர்மம் முதலிய வற்றை நம்மால் முடிந்தவரை செய்ய வேண்டும்.

கர்மம் செய்ய வேண்டிய முறையைப் பற்றி, அவர் கீதா தாத்பர்யத்தில், ''கர்மத்தை விஷ்ணுவுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்ற யோகரூபத் துடன் செய்ய வேண்டும். கர்மம் செய் வதை விட்டால் நரகம் கிட்டும்'' என்கிறார்.

ஸ்ரீமத்வரைப்பற்றிக் குறிப்பிடும் போது, ஸ்ரீசங்கரர் எப்படிச் சிவபெரு மானின் திருஅவதாரம் என்று நம்புகிறார் களோ, ஸ்ரீராமானுஜரை ஆதிசேஷனின் அவதாரமாக எப்படிக் கருதுகிறார்களோ அப்படியே ஸ்ரீமத்வாசார்யரை வாயு தேவனின் மூன்றாவது அவதாரமாகக் கருதுகிறார்கள் பெரியோர். ★

—ஸ்ரீராமகிருஷ்ண விஜயம், மே 1958

## தோஷ நிவர்த்தி

அட்சதை சத்துருநாசத்தையும், அறுகு பிராத்ரு வத தோஷத் தையும், கொன்றைப்பூ மாத்ரு வத தோஷத்தையும், வெள்ளெருக்கம்பூ அன்னிய ஸ்திரீ கமனத்தையும், நீலோற்பலம் வாக்குத் தோஷத் தையும், குங்குமப்பூ நவக்கிரக பீடையையும், வில்வம் பொய் சொன்ன பாவத்தையும், கோங்கம் பூ கள்ளுண்ட பாவத்தையும், கத்தரிப் பத்திரம் குஷ்டரோகத் தையும், துளசி வறுமையையும், தும்பைப்பூ கோஹத்தி தோஷத் தையும், பலாசம்பூ பொன் திருடின தோஷத்தையும், நெய்தற்பூவும் நெல்லியும் ரோகத்தையும் நீக்கி விடும்.



## வள்ளலார் வாக்கு

* சீவகாருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு.

* இறைவன் எதற்காக நஞ்சுண்டான் தெரியுமா? மன்னுயிர்களும் வானவர்களும் வாழுதல்பொருட்டு. அவ்வளவு இரக்கமுடையவன் இறைவன்.

* தாய்ப் பசுவைக் காணுமல் தவிக்கும் பசுங் கன்றுக்கு ஒப்பாகத் துடித்தால் இறைவனைக் காணலாம்.

* உயர்ந்த குலம், தாழ்ந்த குலம் என்று சொல்கிறீர் களே! இரண்டு குலமும் மரணமடைவதை நீங்கள் பார்க்க வில்லையா? இறைவனை நேசிக்காத எந்தக் குலமும் புழுக் குலமே.

* மறுமை இன்ப வாழ்க்கை எப்படி இருக்கும் என்பதை அறிவிக்கும் வகையில் இம்மை வாழ்வு அமைய வேண்டும்.

* உலோபிகளை அடுத்து இரப்பதைக் காட்டிலும் இறை வனை அடுத்து விண்ணப்பித்துக் கொள்வது எவ்வளவோ மேலானது.

* கவலை கூடாது; உள்ளும் புறமும் ஓர் துணையாக வள்ளல் இருப்பதால், வட்டமடைவதற்குக் காரணமே இல்லை.



# அருள் நெறிக் கதை

அப்போது துவாரகையில் கண்ணனின் விருந்தினனாக அர்ஜுனன் தங்கியிருந்தான். அவன் ஒரு நாள் தனது காண்டீபத்தின் பெருமைபற்றிப் பேசினான்.

அவன், ''கண்ணா! என்னிடம் இந்தக் காண்டீபம் இருக்கும் வரை என்னை யாராலும் தோற்கடிக்க முடியாது. என் அம்புகளுக்கு எதிரில் நிற்கும் வல்லமை இந்திரனுக்குக்கூடக் கிடையாது'' என்றான்.

அப்போது அரண்மனை வாயிலில் அழுகுரல் கேட்டது. கிருஷ்ணனும் அர்ஜுனனும் அழுகுரல்' வந்த திக்கை நோக்கி விரைந்தனர்.

# அர்ஜுனன் பெற்ற படிப்பினை

அங்கே பிராம்மணன் ஒருவன் தன் கையில் இறந்துபோன ஒரு குழந்தையை வைத்துக்கொண்டு நின்றான். அவன் அர்ஜுனனை நோக்கி, "அர்ஜுனா! எனக்கு எட்டுக் குழந்தைகள் பிறந்தன. ஒவ்வொன்றும் பிறந்தவுடனே இறந்துவிட்டது. அவை இறந்த ஒவ்வொரு சமயத்திலும் நான் கண்ணனிடம் உயிர்ப்பிச்சை வேண்டினேன். ஆனால் கண்ணன் தரவில்லை. இதோ என்னுடைய இந்த ஒன்பதாவது குழந்தையும் இறந்துவிட்டது. அரசனாக இருக்கும் கண்ணன் தன் கடமையிலிருந்து தவறுவதனால் மக்கள் கஷ்டப்படுகிறோம்'' என்றான்.

அதைக் கேட்ட அர்ஜுனன் கண்ணன் பொறுப்பற்று இருக்கிறான் என்று நினைத்தான். அந்த எண்ணத்தில் அவன், "வேதியரே! மறுமுறை உங்கள் மனைவிக்கு மகன் பிறக்கும்போது எனக்குத் தெரிவியுங்கள். நான் எப்படியும் உங்கள் குழந்தையை நிச்சயம் காப்பாற்றுவேன். இது சத்தியம்'' என்றான்.

அதற்குப் பிராம்மணனோ, ''அர்ஜுனா! பலராமன், பிரத்யும்னன், அநிருத்தன் போன்ற பெரும் வீரர்களாலேயே என் குழந்தைகளைக் காப்பாற்ற இயலவில்லை. உன்னால் எப்படி முடியும்?'' என்று கேட்டான்.

அர்ஜுனன், ''நான் அவர்களைப் போன்றவன் அல்ல. காண்டீபம் என்ற வில்லை ஏந்தியுள்ள விஜயன் நான். தேவை ஏற்பட்டால் யமனையும் வென்று உன் குழந்தையை மீட்டுத் தருவேன்'' என்று உறுதியளித்தான்.

கண்ணன் எல்லாவற்றையும் புன்சிரிப்புடன் கவனித்துக்கொண்டிருந்தான்.

அந்தப் பிராம்மணன் ஒரு நாள் வந்து தனக்குப் பிறக்கப் போகும்

அ.வே. தனுஷ்கோடி



குழந்தையைப் பாதுகாக்க வரும்படி அர்ஜுனனை அழைத்தான். அர்ஜுனன் உடனே பிராம்மணனுடன் சென்றான். பிராம்மணனின் மனைவி இருந்த குடிசையைச் சுற்றி அம்புகளாலேயே அர்ஜுனன் பாதுகாப்பான ஓர் அரண் அமைத்தான்.

திடீரென்று உள்ளேயிருந்து அழுகுரல் கேட்டது. பிராம்மணன் வந்து புலம்பினான். அவன், ''அர்ஜுனா! முந்தைய குழந்தைகளின் உடலையாவது பார்த்தேன். இந்த முறை அதுகூட இல்லை, என்னை இப்படிக் கைவிட்டுவிட்டாயே!'' என்று சொல்லி அழுதான்.

அர்ஜுனன், ''இதோ இப்போதே புறப்படுகிறேன். உன் குழந்தையைத் தேடி மீட்டு வருகிறேன்'' என்று கூறி, ரதத்தில் ஏறிப் புறப்பட்டான்.

அர்ஜுனன் எங்கெங்கோ தேடினான். ஆனால் குழந்தை மட்டும் அகப்படவே இல்லை. குழந்தையை மீட்டுத் தர இயலாத நிலையில் அவன் தீக்குளிக்கச் சித்தமானான்.

தீயில் குதிப்பதற்கு அர்ஜுனன் நெருப்பை வலம் வந்துகொண்டிருந்த போது அங்கே கண்ணனின் குரல் கேட்டது. ''அர்ஜுனா, நில்! பிராம்மணனின் குழந்தைகள் இருக்கும் இடத்திற்கு உன்னை அழைத்துச் செல்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே அங்கு வந்த கண்ணன், அர்ஜுனனைச் சமாதானப் படுத்தி, உடன் அழைத்துக்கொண்டு, தேரில் ஏறிப் புறப்பட்டான்.

இருவரும் காரிருளைக் கடந்து சென்றனர். பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமனின் இருப்பிடம் சேர்ந்தனர்.



வேதங்கள் காட்டும் வழியைப் பின்பற்றாமல் எவனொருவன் வேறு வழியைப் பின்பற்றுகிறானோ, அவன் கையில் இருக்கிற பாயஸத்தை விட்டுவிட்டுப் புறங்கையை நக்குபவனுக்கு ஒப்பானவன். —பிரம்ம கீதை

கிருஷ்ண பகவான் மகாவிஷ்ணுவை நமஸ்கரித்தார். பத்துக் குழந்தைகள் சூழ, பகவான் மகாவிஷ்ணு அமர்ந்திருப்பதைக் கண்ட அர்ஜுனனுக்குத் திக்பிரமை ஏற்பட்டது. அவனும் மகாவிஷ்ணுவை நமஸ்கரித்தான்.

விஷ்ணு பகவான், அர்ஜுனனிடம், ''உன்னை இங்கு என் முன்னால் வரவழைப்பதற்காகவே இந்தக் குழந்தைகளை இங்கே கொண்டு வந்தேன். நீ உலகில் செய்ய வேண்டிய உன் கடமைகளை உனக்கு நினைவுபடுத்துவதற்காகவே உன்னை இங்கே வரவழைத்தேன். விரைவில் தேவகாரியங்களை முடித்துவிட்டு என்னிடம் திரும்பி வா'' என்றார்.

அர்ஜுனன், ''கண்ணன் திரிகால ஞானி, சர்வக்ஞன். எனவேதான் இவ்விதம் நாடகமாடி உண்மையை உணர வைத்தான். ஆண்மையும் வீரமும்-ஆயுத பலமும் இருந்தால் மட்டும் போதாது. இறையருள் மட்டுமே எல்லாவற்றிற்கும் முக்கிய காரணம் எனக் கண்டேன். என் வீண் கர்வம் ஒழிந்தது'' என்று எண்ணினான்.

மகாவிஷ்ணுவிடம் விடைபெற்றுக் கொண்டு பத்துக் குழந்தைகளுடன் கிருஷ்ணனும் அர்ஜுனனும் துவாரகையை நோக்கிப் புறப்பட்டனர்.

# ததிபாண்டன் வரலாறு

த. காவேரி

கண்ணன் வெண்ணெய்திருடியதைக் கண்ட யசோதை அவனைப் பிடிக்க ஓடினாள். அவன் அவளுக்கு அஞ்சியது போல் நடித்துத் தப்பியோடினான். அவன் ததிபாண்டன் என்ற இடையன் வீட்டில் புகுந்து கொண்டான்.

அந்த இடத்தை நோக்கி யசோதை வருவதை அறிந்த கண்ணன், ''என்னைப் பிடிப்பதற்கு என் தாய் வந்துகொண்டிருக்கிறாள். அவளிடம் நான் அகப்படக்கூடாது; ஆதலால், என் மீது தயிர்த் தாழியைக் கவிழ்த்துச் சிறிது நேரம் என்னை ஒளித்து வை'' என்று ததிபாண்டனிடம் கேட்டுக்கொண்டான். ததிபாண்டன் அவ்விதமே செய்தான்.

அங்கே யசோதை வந்தாள். தாழி அருகில் இருந்த ததிபாண்டனிடம் அவள், ''கண்ணன் இங்கே வந்தானா?'' என்று விசாரித்தாள். ததிபாண்டன், ''இல்லை'' என்று சொல்லிவிட்டான். யசோதை, ''அவன் வீட்டிற்கு வரட்டும்; அவனை ஒரு கை பார்க்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே தன் வீடு திரும்பினாள்.

அவள் திரும்பியதும் உடனே ததிபாண்டன் கண்ணனை வெளிவிடாமல், தாழியின் மீது ஏறி உட்கார்ந்துகொண்டான். உள்ளே இருந்த கண்ணன் தன்னை வெளியில் விட்டுவிடும்படி ததிபாண்டனை வேண்டினான்.

இடையன் பல பிறவிகளில் பகவானைக் குறித்துப் பெருந்தவம் இயற்றியவன். அது காரணமாக அவன் உள்ளத்திற்குக் கண்ணன்

---

மதம் என்பது அக உணர்வில் எழும் ஒரு மாறுதல்; மனதில் ஏற்படும் புரட்சி; தெளிவின் விளக்க நிலை.

—டாக்டர் ராதாகிருஷ்ணன்

உடற்பயிற்சி உடலுக்கு உரமும் நீண்ட ஆயுளும் தரும். ஆனால் தெய்வபக்தியோ உன்னை மனிதனாக்கி இறைவனிடம் சேர்க்கும்.

—ஓர் அறிஞர்

மழை பெய்தது என்பதற்கு அடையாளம் நிலத்தின் ஈர நிலை. பக்திக்கு அடையாளம் பக்தனின் சாந்த நிலை.

சாந்தியானது பக்தனை வெற்றி தோல்வி, இகழ் புகழ், பேறு இழப்பு ஆகியவற்றின் தாக்குதல்களிலிருந்து காப்பாற்றுகிறது.

—ஒரு மகான்

சர்வேச்வரனே என்ற உண்மை புரிந்துவிட்டது. ஆதலால் அவன் கண்ணனிடம், ''பகவானே! எனக்குத் தேவரீர் முக்தி நல்கினாலன்றி உங்களை வெளியே விடமாட்டேன்'' என்றான்.

கருணைக் கடலான கண்ணன், ''வீடுபேறு தந்தேன். இனி என்னை வெளியே விட்டுவிடு'' என்றான்.

ததிபாண்டன், ''உங்கள் திருவருளை நான் பெறுவதற்குக் காரணமாக இருந்த இந்தப் பானைக்கும் (தாழிக்கும்) தாங்கள் முக்தி அருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். கண்ணனும் அவ்விதமே, ''நீ குறிப்பிடும் இந்தப் பானைக்கும் முக்தி தந்தேன்'' என்று அருளினான்.

தனக்கும் தாழிக்கும் கண்ணன் முக்தி தருவதாக ஒப்புக் கொண்ட பிறகே, ததிபாண்டன் கண்ணனைத் தாழியிலிருந்து வெளியே வர அனுமதித்தான்.

நாம் மேலே கண்ட இந்த நிகழ்ச்சியைத் திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாசுரமாக வடித்துள்ளார்—



சிந்திக்க நெஞ்சில்லை; நாவில்லை
நாமங்கள் செப்ப; நின்னை
வந்திக்க மெய்யில்லை; வந்திருபோது
மெய்ம் மாமலர்ப் பூம்
பந்தித் தடம் பொழில் சூழ் அரங்கா
ததிபாண்டனுன்னைச்
சந்தித்த நாள் முத்தி பெற்றதென்னே
தயிர்த் தாழியுமே.

''பாண்டம் உயிர் இல்லாத ஜடப் பொருள் (அசித்). அந்த ஜடப் பொருளுக்கும் உன் பெருங்கருணை முக்தி தந்தது. அப்படி இருக்கும்போது உயிருள்ள (சித்தாக இருக்கும்) என் போன்றவருக்கு முக்தி வாய்க்காதது ஏன்?'' என்று கேட்டுப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அங்கலாய்க்கிறார்.

# அருள் தரும் கதை

## மடாதிபதியின் சாபம்

- நாடோடி -

'சிவன் சொத்து குலநாசம்' என்பார்கள். தெய்வத் தொண்டிற்காக அல்லது பொது நலத்திற்காகப் பணத்தைச் செலவழிக்கும் நிலையில் இருப்பவர்கள் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

ராமர் நாட்டை ஆண்டுகொண்டிருந்தபோது ஒரு நாள் லட்சுமணனைப் பார்த்து, ''லட்சுமணா! யாராவது நீதி கோரி நமது அவைக்கு வெளியே வாசலில் நின்றுகொண்டிருக்கிறார்களா, பார்'' என்று சொன்னார்.

லட்சுமணன் வெளியே சென்று நாலு பக்கமும் திரும்பிப் பார்த்தான். யாரையும் காணவில்லை. ஆகவே உள்ளே வந்து, ''பிரபோ! உங்களிடம் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி நியாயம் கேட்க வந்துள்ள யாரையும் நான் காணவில்லை'' என்று சொன்னான்.

அதற்கு ராமர், ''அரசன் நீதியோடும் நேர்மையோடும் அரசு புரிந்தால்தான் மக்கள் நல்ல வழியில் செல்வர். ஆகவே இது விஷயமாக அரசன் மிக்க விழிப்புடன் இருக்க வேண்டும். ஆகவே மீண்டும் ஒரு நடை சென்று யாராவது என்னிடம் நியாயம் தேடி வந்திருக்கிறார்களா என்று பார்'' என்று சொன்னார்.

லட்சுமணன் மீண்டும் வெளியே சென்றான். அவன் அங்கு மனிதர் யாரையும் காணவில்லை. ஆனால் ஒரு நாய் மட்டும் மிகவும் வருத்தத்துடன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தான்.

லட்சுமணனுக்கு மிருகங்கள், பறவைகள் இவற்றின் மொழி தெரியும். ஆகவே நாயின் மொழியில், ''ஏ நாயே! ஏன் இத்தனை வருத்தத்துடன் காணப்படுகிறாய்? உனக்கு ஏதாவது கஷ்டம் ஏற்பட்டிருந்தால் என்னவென்று தைரியமாகச் சொல்'' என்றான்.

''ஐயா, நான் அரசர் ராமனைக் கண்டு என் குறையைச் சொல்ல வேண்டும்'' என்று நாய் சொல்லிற்று.

உடனே லட்சுமணன் அவையில் வீற்றிருந்த ராமரிடம் சென்று, ''ஒரு நாய் தங்களைக் காணக் காத்திருக்கிறது. அது தங்களிடம் ஏதோ முறையிட வேண்டுமாம்'' என்று தெரிவித்தான்.

''அதை உள்ளே வரச் சொல்'' என்றார் ராமர்.

ஆனால் லட்சுமணன் நாயை உள்ளே வரும்படி அழைத்ததற்கு அது உள்ளே வர மறுத்தது. ''ஐயா, கோயில், அரச சபை, அந்தணர்கள், அக்கினி, இந்திரன், வருணன், சூரியன் ஆகிய தேவர்கள் வசிக்கும் இடங்கள் இவற்றுக்கு என் குலத்தவர் செல்வது தகாது. ஆகவே ராமர் கட்டளையிட்டாலன்றி நான்

ரா. வீ. 4

உள்ளே வரக் கூடாது'' என்று நாய் சொல்லியது.

லட்சுமணன் இதை ராமரிடம் சொல்ல, ''நான் கட்டளையிட்ட தாகச் சொல்லி அதை அழைத்து வா'' என்று சொன்னார் ராமர்.

லட்சுமணன் நாயை உள்ளே அழைத்து வந்தான்.

நாயைப் பார்த்த ராமர், ''உன் குறை என்ன என்று சொல். என்னிடம் நியாயம் கேட்க உனக்கு முழு அதிகாரம் இருக்கிறது. என் அரசாங்கத்தில் என்னை வந்து பார்ப்பதற்கும் என்னிடம் நியாயம் கேட்பதற்கும் மனிதர்களுக்கு எத்தனை உரிமை உண்டோ அத்தனை உரிமை என் அரசாங்கத்திலுள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் உண்டு'' என்று சொன்னார்.

அப்பொழுதுதான் நாயின் தலையில் யாரோ அடித்துக் காயப்படுத்தியிருப்பதை ராமர் கவனித்தார்.

நாய் அவரைப் பார்த்து, ''பிரபுவே! குடிமக்களைக் காப்பாற்றுகிறவன் அரசன்தான். பிரஜைகள் தூங்கும் சமயத்தில் தான் விழித்துக் கொண்டிருந்து அவர்களுக்கு எந்த ஆபத்தும் வராமல் காப்பாற்றுகிறவனும் அரசன்தான். ஆகவே எனக்கு நேர்ந்த கஷ்டத்தைத் தங்களிடம் சொல்கிறேன், கேட்க வேண்டும். சர்வார்த்தசித்தன் என்ற அந்தணர் இருக்கிறார். அவர்



பிக்ஷை வாங்கித் தம் வாழ்க்கையை நடத்தி வருகிறார். அவர் ஒரு காரணமுமின்றி என் தலையில் அடித்துவிட்டார்'' என்றது.

உடனே ராமர் அந்த அந்தணரை அழைத்து வரச் சொன்னார்.

அந்தணர் வந்ததும் ராமர் அவரைப் பார்த்து, ''நீங்கள் ஏன் இந்த நாயை அடித்தீர்கள்? உங்கள் கோபம் காரணமாகத்தான் இந்தப் பாவத்தைச் செய்தீர்கள் என்று நினைக்கிறேன்'' என்று சொன்னார்.

உடனே அந்தணர், ''நீங்கள் சொல்வது உண்மைதான், அரசே! பிக்ஷை வாங்குவதற்காக நான் சுற்றிக்கொண்டிருந்தேன். எனக்கு இன்று பிக்ஷை கிடைக்கவில்லை. பசி மிகவும் அதிகமாக இருந்தது. அப்போது இந்த நாய் வழியில் படுத்திருந்தது. இதை நகரும்படி சொன்னேன். இது நகரவில்லை. ஆகவே கோபத்தினால் கையிலிருந்த கழியால் இதன் தலையில் அடித்தேன். நான் செய்தது குற்றம்தான். ஆகவே அதற்கு உரிய தண்டனையைக் கொடுங்கள். நீங்கள் என்னைத் தண்டித்தால்தான் அந்தப் பாவம் என்னை விட்டு விலகும்'' என்று சொன்னார்.

உடனே ராமர் சபையோர்களைப் பார்த்து, ''இந்த அந்தணருக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்?'' என்று கேட்டார்.

சபையோர் என்ன சொல்வது என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தபோது, நாய், ''நான் சொல்லலாமா, இவருக்கு என்ன தண்டனை கொடுக்கலாமென்று?'' என்று கேட்டது.

''சொல்'' என்று ராமர் சொல்ல, அதற்கு நாய், ''இவரை ஒரு மடாதிபதியாகச் செய்துவிடுங்கள்'' என்று கூறியது.

உடனே ராமர் அந்த அந்தணரை மடாதிபதியாக்கி, அவருடைய மடத்திற்கு அனுப்பி வைத்தார்.

''மடாதிபதியாவது எப்படித் தண்டனையாகும்?'' என்று சபையோர் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தபோது நாய், ''நான் போன ஜன்மத்தில் ஒரு மடாதிபதியாகத் தான் இருந்தேன். மடாதிபதியாக இருந்தபொழுது தேவர்கள், துறவியர், குழந்தைகள், ஸ்திரீகள், பிராம்மணர்கள், ஏழை எளியவர் இவர்களுக்காகக் கொடுக்கப்படும் பணத்தை எனக்காகச் செலவழிக்கும் சங்கடம் நேரிட்டது. அந்தப் பாவத்தினால்தான் நான் நாயாகப் பிறந்துள்ளேன்'' என்று சொல்லிற்று. 

---

கேளாமல் இருக்கும்பொழுது கொடுப்பவனுடைய பெருமையே பெருமையாகும். —சீக்கியம்

நோய் வந்து படுக்கையில் விழுந்து நாறிச் சாவதைவிட, ஒரு துணிச்சலான பணியில் இறங்கிப் பலியாவது எவ்வளவோ புனிதமானது. —ஓர் அறிஞர்

காதுக்கு அழகு நல்ல விஷயங்களைக் கேட்பதே தவிரக் குண்டலம் அன்று. கைக்கு அழகு தானமே தவிரக் கங்கணம் அன்று. கருணையே நிறைந்த சரீரம் பரோபகாரத்தாலேயே பிரகாசிக்கிறது: சந்தனம் பூசுவதனால் அன்று. —பர்த்ருஹரி

எது நடைபெற முடியாதோ அது ஒருபோதும் நடைபெறாது; எது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும். தண்ணீரிலே வண்டி ஓடாது; தரையிலே ஓடம் ஓடாது. —ஹிதோபதேசம்

உலகம் ஓர் ஏணி, சிலர் மேலே ஏறுகிறார்கள்; சிலர் கீழே இறங்குகிறார்கள். —இத்தாலி

மனிதனின் மனச்சாட்சியே இறைவனின் அசரீரியாகும். —பைரன்

# வாகனங்களின் தத்துவம்

ராஜம் ஐயராமன்



சிவன் கோயில்களில் நடைபெறும் விழாக்களுக்கு மிகச் சிறந்த விளக்கம் இந்தக் கட்டுரை.

நமது கோயில்கள் இறைவனை வழிபடும் இடமாக மட்டும் திகழாமல் ஒவ்வொரு தலமும் மானச பூஜையின் உண்மையை விளக்கி, சிவஞானத்தை உண்டாக்கும் கருவியாகவும் திகழ்கிறது. அங்கே நடக்கும் திருவிழாக்கள் அனைத்தும் இறைவன் நடத்தும் பஞ்ச கிருத்தியங்களை உணர்த்துபவையாகும்.

ஆலய அமைப்பு முறை, திருவுருவ அமைப்பு, பூஜைமுறை, திருவிழாக்கள் முதலியவற்றில் பல தத்துவங்கள் பொதிந்துள்ளன. ஆனால், இன்று நாம் இவற்றின் தத்துவங்களை உணர்ந்து கொள்ளாமலேயே திருவிழாக்களைக் கொண்டாடி வருகிறோம்.



உத்சவம் என்பது, சிருஷ்டி மார்க்கத்தைக் குறிப்பது. இது பஞ்ச கிருத்தியம் நடைபெறுவதை விளக்குவதாகும். கோயில் திருவிழாக்கள் சமுதாயத்தின் நன்மைக்காகவே ஏற்பட்டிருக்கின்றன.

ஒவ்வோர் ஆலயத்திலும் பத்து அல்லது பன்னிரண்டு நாட்கள் வரை மிகச் சிறப்பாகப் பூஜைகள் நடத்தி அங்குள்ள மூர்த்திகளின் திருவுருவங்களைப் பல விதமான வாகனங்களின்மேல் எழுந்தருளச்செய்து கோயில் பிராகாரங்களிலும் வீதிகளிலும் பவனி வரச் செய்யும் விழாவிற்குத் திருவிழா அல்லது உத்சவம் என்று பெயர்.

## உத்சவங்களின் வகைகள்

உத்சவங்கள் நித்தியோத்சவம், வாரோத்சவம், பட்சோத்சவம், மாதோத்சவம், அயனோத்சவம், வருஷோத்சவம் என்பவை ஆகும். அது தவிர, பஞ்சம் அல்லது பிரபஞ்ச விபத்

துக்கள் ஏற்படும் காலங்களில் தீமையைத் தடுப்பதற்கான விருப்பத்தினுலும் திரு விழாக்கள் நடத்துவது உண்டு.

தினந்தோறும் செய்யும் பூஜை வழி பாடுகளை நித்தியோத்சவம் என்றும், சுக்கிரவாரத்தில் செய்யப்படும் சிறப்புப் பூஜையை வாரோத்சவம் என்றும், பௌர்ணமி, அமாவாசை, பிரதோஷம் போன்ற தினங்களில் வழிபடுவது பட் சோத்சவம் என்றும், மாதப் பிரவேசத் தன்று செய்யப்படும் பூஜை மாதோத் சவம் என்றும், உத்தராயண தக்ஷிணயன புண்ணியகாலங்களில் கொண்டாடப்படு வதை அயனேத்சவம் என்றும் கூறுவர்.

மகோத்ஸவம், பிரம்மோத்சவம், வசந்தோத்சவம் முதலியன வருஷத்தில் பத்துப் பன்னிரண்டு தினங்கள் கொண் டாடுவர். இதனை வருஷோத்சவம் என்பர். மகா-பெரிய, உத்-உயர்வான, ஸவ-சிருஷ்டி முதலிய காரியங்கள் அதாவது உயர்ந்த சிருஷ்டி முதலிய ஐந்து தொழில்களைக் குறிக்கும் அடை யாளம் மகோத்சவம் என்பதாகும். பிரம்மோத்சவம் என்ருல், பெரிய திருவிழா என்று பெயர். வசந்தோத் சவம் என்பது வசந்த காலத்தில் செய்யப் படும் உத்சவம் ஆகும்.

ஒரு நாள் முதல் இருபத்தொரு நாள் வரை இந்தத் திருவிழாக்களைக் கொண் டாடுவது உண்டு.

திருவிழா நடத்த வேண்டிய நாட்கள் பற்றி ஆகமங்கள் பலவாறு கூறுகின்றன.

பெரும்பாலும் கொடியேற்றம் முதல் கொடி இறக்கம் வரை பத்து அல்லது பன்னிரண்டு தினங்கள் வரை கொண் டாடுவார்கள். திருவிழாவின் தொடக் கத்தில் அதைக் குறிப்பிடுவதற்குக் கோயி லில் கொடி ஏற்றுவார்கள். விழா இறுதி யில் அதை இறக்குவார்கள். கொடி ஏற்றிவிட்டால் அது இறக்கப்படும்வரை ஊரை விட்டு எவரும் வெளியே செல்லக் கூடாது என்பர். இது திருவிழா மக்க ளின் நன்மைக்காகவே நடத்தப்படுகிறது என்பதையே குறிப்பிடுகிறது.

பக்திபூர்வமான விழாக்களைப் பிற் பகலில் செய்ய வேண்டும் என்பது விதி.

**பத்து நாள் உத்சவமும் உணர்த்தும் தத்துவம்**

பத்து நாள் திருவிழாவும் ஒவ்வொரு தத்துவத்தை உணர்த்துவதாகும்.

முதல் நாள் விழா தூல நீக்கத்தையும், இரண்டாம் நாள் விழா ஸ்தூல சூட்சும நீக்கத்தையும், மூன்றும் நாள் விழா மூவினை, முக்குற்றம், மும்மலம், முக் குணம், முப்பிறப்பு முதலானவற்றை நீக்கும் தன்மையையும் அறிவிப்பதாகும்.

நான்காம் நாள் திருவிழா அந்தக் கரணம் நான்கையும், நால்வகைத் தோற்றத்தையும் நீக்குவதாகும். ஐந்தாம் நாள் திருவிழா ஐம்பொறி, ஐந்து அவஸ்தைகள், ஐந்து மல நீக்கத்தைக் குறிக்கும். ஆரும் நாள் திருவிழா உட் பகையான காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் என்ற ஆறும், ஆறு அத்துவா, ஆறு கன்ம மலங்கள், பதமுக்தி ஆறு என்னும் ஆறு வகைகளை நீக்குவதைக் குறிக்கும்.



ஏழாம் நாள் விழா ஏழுவகைப் பிறப்புகள், காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் வித்தியா தத்துவங்கள் ஏழு, அஞ்ஞானம், பொய், அயர்வு, மோகம், சூனியம், மாச்சர்யம், பயம் என்னும் மாயையின் மலம் ஏழையும் நீக்குவதை உணர்த்து கிறது.

எட்டாம் நாள் விழா பரமசிவனது எண் குண விளக்கத்தையும், ஒன்பதாம் நாள் விழா நவபேத விளக்கத்தையும், பத்தாம் நாள் விழா அந்தமில்லாத சிவானந்தக் கடலில் மூழ்கியிருக்கும் தன்மையையும் குறிக்கின்றன.

மேலும், பத்து நாள் திருவிழாக்களில் முதல் ஐந்து நாள் விருத்திக் கிரமத் தொழிலையும், பிற்பகுதி ஐந்து நாளும் லயக் கிரம ஐந்தொழில் நடைபெறுவதை யும் விளக்குகின்றன. இதற்குத் தக்கபடி வாகனங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

திருவிழா நாட்களில் நடத்தப்படும் கிரியைகளும் அவற்றின் தத்துவமும்— திருவிழா நாட்களில் முக்கியமாக நடத்த வேண்டிய கிரியைகளை அஷ்டாதசக் கிரியை என்பர். அவை 1. வ்ருஷயாகம், 2. துவஜாரோகணம், 3. ப்ரஹத்தாளம், 4. அங்குரம், 5. யாகசாலை, 6. அஸ்த்ர யாகம், 7. பலிதானம், 8. யானக்ரமம், 9. ப்ரிவேஷம், 10. நீராஜனம், 11. கௌதுகம், 12. தீர்த்த சங்க்ரஹணம், 13. சூர்ணோத்ஸவம், 14. தீர்த்தம், 15. அவரோகணம், 16. ஸ்நபனம், 17. திருக்கல்யாணம், 18. பக்தோத்ஸவம் என்பன. இவற்றோடு ரதாரோஹணம், மிருக யாத்திரை, பூர்ணாஹுதி, மௌனோத்ஸவம் முதலியவற்றைச் சேர்த்தும் கூறுவர்.

இவற்றுள் முக்கியமாகச் செய்யப் படும் சடங்குகள் சில. அவை—மண் எடுத்தல், முளையிடுதல், காலை மாலை பலவித வாகனங்களில் மூர்த்தியை எழுந்தருளச் செய்தல், யாகம் செய்தல், திருக்கல்யாணம் செய்தல், தீர்த்தம் கொடுத்தல், கொடியிறக்கம், திருவூடல், சண்டேசுர உத்ஸவ பூர்த்தி முதலியன.

இறைவன் நடத்தும் ஐந்தொழிலான உண்டாக்குதல், காப்பாற்றுதல், அழித் தல், மறைத்தல், அருளல் (சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக் கிரகம்) என்பவற்றைப் பத்து நாள் திருவிழாவில் அமைத்துள்ளனர்.

மண் எடுத்தல், முளையிடுதல், கொடி யேற்றம் முதலியவை சிருஷ்டித் தொழிலை உணர்த்துகின்றன. வாகன உத்சவம், யாகம், பலியிடுதல் முதலியன ஸ்திதி அல்லது காத்தல் தொழிலைக் குறிக் கின்றன. தேர்த்திருவிழா, பரிவேட்டை, சாந்தணிதல் முதலியன சம்ஹாரத் தொழிலைக் குறிப்பன. மௌனோத் ஸவம் திரோபவத்தைக் குறிக்கும். நடராஜர் உத்சவம், மட்டையடி, திரு வூடல் முதலியன அனுக்கிரகத்தைக் குறிக்கும். அன்றியும், அபிஷேகம் சிருஷ்டியையும், கௌதுகபந்தனம் ஸ்திதி யையும், அகருதூபம் சம்ஹாரத்தை யும், கர்ப்பூரதீபம் திரோபவத்தையும், கர்ப்பூர அடுக்குத் தீபம் அனுக்கிரகத்தை யும் உணர்த்தி நிற்கின்றன.

பத்து நாள் கோயில் உற்சவத்தில் இறைவன் பலவேறு வாகனங்களில் எழுந்தருளுகிறார். அவை குறித்த தத்துவரீதியான விளக்கங்களை அடுத்த இதழில் விரிவாக நாம் பார்க்கப் போகிறோம்.

தஞ்சை பெரிய கோவில் சுப்பிரமணிய ஆலயத்தின் பிராகாரத் தில் மேற்குப் புறத்தில் ஊசியையோ நூலையோ விட்டால் கீழே வரும்படி மிகவும் நுணுக்கமாகக் கருங்கல்லில் பூவேலை செய்திருக் கிறார்கள். இது சோழர் காலச் சிற்ப வேலைபாட்டுத் திறமையை நன்கு விளக்குகிறது.

இங்கேயுள்ள விநாயகர் சிலையில் ஒவ்வோர் இடத்திலும் தட்டி னால் பலவித ஜலதரங்க ஒலி ஏற்படுகிறது. தகவல் : எஸ்.கே. சண்முகம்

